# உண்மையே இறைவன்



டாக்டர் மாநிலன்

# உண்மையே இறைவன்

(TRUTH IS GOD)

டாக்டர் மாநிலன்

(கி. ஜெகதீஸ்வரன்)

வசந்தம் வெளியீடு

261, விஜயலட்சுமி தெரு,
திருப்பதி—517507 (A.P.)

முதற்பதிப்பு : செப்டம்பர், 1998


''உண்மையே இறைவன்'' எனும் இந்நூல்
திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின்
பொருளுதவியின் துணையோடு வெளிவருகிறது

விலை : 22-00

UNMAIYE IRAIVAN

Tamil

By

Dr. K. Jagadeeswaran, Ph.D.,
'MAANILAN'

First Edition : September 1998

Copies : 1000

Pages : iv + 112 = 116

அச்சிட்டோர் :

ஸ்ரீதுர்க்கை பிரிண்டிங் பிரஸ்,

21, தென்மேற்கு போக் சாலை,
தி.நகர், சென்னை-17.
போன் : 433 41 30

# அணிந்துரை

**"எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும்— அப்பொருள்**
**மெய்ப்பொருள் காண்ப தறிவு."** — குறள்

இக்குறளின் கருத்தினை மனதிலிருத்தி இந்நூலினை படித்து முடித்தேன். பின்னர், உண்மையைச் சொல்லித் தானே ஆகவேண்டும்?

இதோ,

இறைவன்— யார், எப்படிப்பட்டவர்; சமயம்— தோன்றியதெப்படி, அதன் நோக்கம், பயன்; மனிதன்— அவனது குணநலன்கள், குறைகள், நிறைகள், கடை பிடிக்க வேண்டிய நெறிமுறைகள், இலட்சியம்; இறைவனையும், சமயத்தையும் பின்பற்றும் வழிமுறைகள்— இப்படிப்பட்ட பலவற்றை அநேகர் எழுதியுள்ளனர், கூறியுள்ளனர், பேசியுள்ளனர். எனவே, இந்நூலாசிரியர் புதிதாக என்ன எழுதப் போகிறார் என்ற எண்ணம் வாசகர்களுக்கு எழுதல் இயற்கையே!

இந்நூல் ஓர் ஆய்வு நூலெனக் கொள்ளலாம். இது போன்ற படைப்புகளின் ஆசிரியப் பெருமக்களினின்றும் சற்றே மாறுபட்ட அணுகுமுறையை இவ்வாசிரியர் கையாண்டிருக்கிறாரென்பது தெள்ளத் தெளிவு.

பலர் எழுதப்பட்டதும், சொல்லப்பட்டதுமான உண்மைகளை மீண்டும் மீண்டும் எழுதுவானேன் என கேட்கலாம். ஆனால், உண்மைகள் எளிதில் ஏற்றுக் கொள்ளப்பட்டதாக வரலாறு இல்லை. எனவேதான், இவ்வாசிரியர் உண்மைகளை மீண்டும் தம் வாயிலாகக் கூறும் கட்டாயத்திலிருக்கிறார் போலும்.

'அரிது, அரிது மானிடராய்ப் பிறத்தலரிது' என்ற வாசகம் நூற்றுக்கு நூறு உண்மை. ஆறறிவைப் பெற்ற நாம் சிந்தனைத் திறனையும், சீர் தூக்கிப் பார்க்கும் பண்பினையும் வளர்த்துக் கொள்ளாமல், உண்மைதனை உணராமல், வாழ்வினை உய்விக்கும் உயர்ந்த அறநெறிகளை மறந்து, போலி வாழ்க்கை வாழ்ந்து நம்மை நாமே ஏமாற்றிக் கொண்டிருக்கிறோம் என்பதனை மிகவும் எளிய நடையில், தெளிந்த நீரோடையைப்போல், அழுத்தமாக, பல மேற்கோள்களைக் காட்டி புரிய வைக்கும் இவ்வாசிரியரின் முயற்சி சீரியதொன்றாகும்.

நம் மனமே இறைவனின் உறைவிடம். இதனை அறிந்தோர் மறுத்திலர்; அறியாதோர் புரிந்திடல் வேண்டும். ஆக இறைவன் நம்முள் கோலோச்ச வேண்டுமாயின், நம் உள்ளம் எத்துணை தூய்மையுடையதாய், நற்பண்புகளை வரித்ததாய், அவர் கோரும் நெறிமுறைகளை நம் எண்ணத்தில், சொல்லில், செயலில் காட்டும் படியாய் இருத்தல் அவசியம்? இந்த அரிய உண்மைதனை அனைவரும் உணர்ந்து நடத்தல் வேண்டுமென்ற பெருநோக்கத்தின் பயனாய் விளைந்ததுதான் ஆசிரியரின் இந்த ஆய்வு நூல்.

**''வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்**
**உள்ளத் தனையது உயர்வு''**

என்று வள்ளுவப் பெருந்தகை தெளிவுபடுத்தியிருப்பது போல் நமது உயர்வுக்கு நம் உள்ளம்தான் அளவு கோல்! எனவே, நாம் உயர்வதற்கு எங்கும், எதையும் தேடி அலைய வேண்டாம்; மனப்பக்குவம்தான் அடிப்படை தேவை. அதனைப் பெற எளிதான வழி முறைகள் ஏராளம்; அத்தனையும் இப்புத்தகத்தில் காணலாம். அவ்வழி நடந்திட திடமான மன உறுதிதான் வேண்டும்.

'அன்பே தெய்வம்', இதில் ஏதும் ஐயமில்லை. அன்பிற்கு அடிமைய? ாகாதோர் எவருளார் இறைவனை

யும் சேர்த்துத்தான் கூறுகிறேன்! ஆண்டவனையே தன் வசப்படுத்தும் அபார சக்தி அன்பிற்கு உன்டென்றால் அதன் வல்லமையை மேலும் விவரித்தல் வேண்டுமா? இத்துணை பேராற்றல் படைத்த அன்பின் வழியில் நாம் எத்துனை பேர் நடக்கிறோம்? வாயளாவ பேசுவோம். பக்கங்கள் பல எழுதுவோம், அநேக புத்தகங்களைப் புரட்டுவோம். ஆனால், இவை யாவும் நம் வாழ்வை செம்மைப்படுத்தவே இயம்பியவை என்ற உண்மைதனை உணராது வாடிக்கையான, பாழ்படும் வாழ்க்கையையே தொடருகிறோம். நம் கைகளினாலேயே நம் கண்களை குருடாக்கிக் கொள்வதை விடுத்து, ஒழுக்கமான வாழ்வை கடைபிடித்து, உண்மைதனை கண்டறிந்து உயர்ந்து நின்று இறைவனை உணர இந்நூல் பேருதவியாக இருக்குமென நம்புகிறேன்.

நமக்கு நாமே விரோதி! ஆம், நம்மிடத்தேயுள்ள தீய சக்திகள்— பேராசை, பொறாமை, சுயநலம், கோபம் முதலியன நம்மை அழிக்க வல்லவை. எனவே இவைகள் நம் விரோதிகள்தானே?

நமக்கு நாமே நண்பன்! ஆம், நம் உள்ளத்தே சுரக்க வல்ல நற்குணங்கள்— அன்பு, இரக்கம், ஈகை, சுய நலமின்மை முதலியன நம்மை காக்க வல்லவை. எனவே இவைகள் நம் நண்பர்கள்தானே? உண்மை இப்படி இருக்க, நண்பர்களை ஒதுக்கி, விரோதிகளை வளர விடுவானேன்? காரணம், சீரான சிந்தனையின்மை, மாயையில் மயக்கம், சீர்கெட்ட நாகரிக உலகிற்குட்பட்ட இயந்திர வாழ்க்கை, நேர்மையான உழைப்பின்றி உயரத் துடிக்கும் மனோபாவம், இன்னபிற எனலாம். இச்சீரழிவிலிருந்து மீள சிறந்த வழியிருப்பதை சித்தரித்திருக்கிறார் இந்நூலாசிரியர்.

முடிவில், உண்மையாக இயம்ப வேண்டுமாயின், "உண்மையே இறைவன்" எனும் இந்நூல் அநேக உண்மை

களை உள்ளடக்கியுள்ளது. இறுதியாக, நம் பிறப்பின் பயனையடையும் மார்க்கத்தை உள்ளங்கை நெல்லிக்கனி போல், குழப்பமின்றி எழுதப்பட்டிருக்கிறதென்றால் மிகையாகா.

கரும்பு தின்ன கூலியா? ஆக, அனைவரும் படித்து பயனுறுவோம்.

நிறைவாக,

**"கற்கக் கசடறக் கற்பவை கற்றபின்**
**நிற்க அதற்குத் தக"**

என்ற பொருள் பொதிந்த இக் குறளை இங்கு நினைவு கூர்வது மிக்க பொருத்தமானதென எண்ணி முடிக்கையில், நல்ல பல நூல்களை இயற்றியுள்ள ஆசிரியர் டாக்டர் **மாநிலன்** அவர்களின் முயற்சி மேலும் சிறக்க வாழ்த்துகிறேன்.

இங்ஙனம்,
**கி. சி. ரமணன்**

# எண்ணம்

'இறைவன்' இருப்பதும், இல்லாததும் வாதமாக இருக்கலாம் ; ஆனால் 'உண்மை' அப்படியல்ல ; உண்மை இருக்கிறது. எந்த நிகழ்ச்சியின் மூலத்திலும் எந்த பொருளின் ஆரம்பத்திலும், எந்த இயற்கையின் விந்தையிலும் உண்மை இருக்கிறது. எனவே அதனை நாம் மறுக்க முடியாது, மறைக்க முடியாது. ஒருவேளை நாம் புரிந்து கொள்ள இயலாமல் இருக்கலாம் ; அது நமது அறிவுக்குப் புலப்படாமல் இருக்கலாம் ; ஆனால் உண்மை என்பது உண்மையே !

உண்மை யென்பது மிகப்பெரிய ஆற்றல். அதனை மறைத்து விடுவதினாலேயே, அது நமக்குப் புரியாததினாலேயே, அது நமது கண்களுக்குப் புலப்படாததினாலேயே இல்லை என்று சூழ்நிலைக்கு ஏற்றாற்போல் வாழ்ந்து கொண்டு இருக்கிறோம். எனவே நாம் 'உண்மேயே இறைவன்' என்று முடிவெடுக்கலாம்.

'என்னிடத்தில் எதுவுமே இல்லை' என்று சொல்பவனிடத்தில் என்ன இருக்கிறது என்பதை நாம் அறியாமல் இருக்கக் கூடும். ஆனால் உண்மைக்கு அது புரியும், தெரியும். எனவே தான் 'Truth is God' என்பது உலகின் எல்லா பாகங்களில் உள்ளவர்களும் எல்லா மதத்தினரும் உணருகின்ற உண்மை.

உண்மைப் புலப்பட நாம் நமது சிந்தனையைத் தூண்டுகிறோம். சிந்தனையன்றி எதுவும் புரியாது. சிந்தனையால் எழுவதுதான் அன்பு, பண்பு, அறிவு, ஆற்றல் வளர்ச்சி, வாழ்வு, நாகரிகம், விஞ்ஞானம் எல்லாமே; இவைகளுக்கெல்லாம் மூலம் இறைவன்.

இறைவனைப் பற்றி சிந்திப்பதும் ஒரு சிறப்பான தாகக் கருதுகிறோம். எல்லா சக்திகளுக்கும் மேற்பட்ட தூய சிந்தனையின் துணையோடு சிந்தித்தால் 'உண்மையே இறைவன்' என்பது நமக்குப் புரிய வரும்.

நமக்குப் புரியாத பல உண்மைகள் எப்படிப் பல அறிஞர்கள் எடுத்துச் சொல்லும் போது நாம் அறிந்துக் கொள்ளுகிறோமோ அப்படித்தான் உண்மை தான் இறைவன் என்பதையும் நாம் சிந்தித்து உணர வேண்டும்.

தூய சிந்தனையுடன் தனது கடமையை ஒழுங்காகச் செய்து மூடநம்பிக்கைகளைத் தவிர்த்து சிறந்த வாழ்வினை அனைவரும் பெற வேண்டும் என்பதே இந் நூலின் குறிக்கோள்.

மனித வாழ்வு உயர்ந்த ஒன்று. அனைத்து உயிர் களைக் காட்டிலும் சிறப்பானதொன்று. அத்தகைய சிறப்பான மனித வாழ்வு சீர்கெட்டு பாழ்நிலைக்குத் தள்ளப்படக் கூடாது என்பதே நோக்கம்.

மிக வேகமாகத் தள்ளப்பட்டு சென்று கொண்டி ருக்கும் இந்தத் துரித விஞ்ஞான உலகில் உண்மை, ஒழுக்கம், ஒற்றுமை இவைகளைப் பற்றியெல்லாம் சிந்திக்கக் கூட நேரமில்லை. சிந்தனை மிக நல்ல பழக்கங் களில் ஒன்று. சிலரின் சொற்பொழிவுகளைக் கேட்டு சிந்திக்கிறோம்; சிலவற்றை நூல்களைக் கற்று சிந்திக் கிறோம். சில நிகழ்ச்சிகளைக் கண்டு சிந்திக்கிறோம்.

என்றாலும் சிந்தனையை நிரந்தரமாகத் தூண்டும் வழிகோலுக்கு 'நூல்' ஒன்றே. வேண்டிய பொழு தெல்லாம் எடுத்துப் படித்து உணர முடியும்.

மனிதனுக்கு இறையுள்ளம் வேண்டும் என்று பல ஞானிகள் எழுதியுள்ளனர். இறைவனே வேண்டாம் என்று வாதிடும் அறிஞர்களும் உள்ளனர். பல இறை உருவங்கள் வேண்டாம், பல குலதர்மங்கள் வேண்டாம். 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்கிற உண்மையான பொது நோக்காவது எல்லோருக்கும் இருந்திடல் வேண்டும்

காலம் முழுவதும் துதிப்பாடிக் கொண்டு நேரத்தை வீணாக்கிடச் சொல்லவில்லை. உண்மை நிலையைப் புரிந்து கொண்டு தனது கடமைகளைச் செவ்வனே செய்தலே சிறப்பு.

இயற்கை தான் இறைவன், இதில் விளக்கம் ஏன்? வீண் வாதம் ஏன்? இப்படிச் சிலர். ஆம், இயற்கையே இறைவன். அந்த இயற்கையிலும் சில விந்தைகள். அது எப்படி என்று ஆராய முற்படும் போது நாம் ஆச்சரியப் படுகிறோம்.

கரு இன்றி எதுவும் இல்லை. அந்தக் கரு எப்படி உருவாயிற்று என்பதை யாராலும் விளக்க முடியாது. முட்டையின்றி கோழியும், கோழியின்றி முட்டையும் வர இடலாது. இதில் முன்னது எது? விதையின்றி செடியும் செடியின்றி விதையும் அப்படித்தான்.

மனிதன் பிறப்பும் அப்படித்தான்! ஆண் இன்றி பெண்ணும், பெண் இன்றி ஆணும் உருவாக இயலாது முதலில் எப்படி உருவானார்கள்? இவைகள் எல்லாம் இயற்கையின் விந்தைகள் என்று பொதுவாகத் தள்ளி

விடலாம். ஆனால் உண்மை எங்கோ ஒளிந்து கொண்டிருக்கிறது. அதைத்தான் இறைவன் என்றும், தேவன் என்றும், கடவுள் என்றும் சொல்லி வருகிறோம். இது மட்டும் உண்மை. 'உண்மையே இறைவன்.'

ஒவ்வொரு மனிதனுக்கும் இறையுள்ளம் தேவைப் படுகிறது. தேவைப்படுகிற அந்த உள்ளங்களுக்கு இது போன்ற நூல்கள் சிறிது பயன்படுகிறது. அந்தச் சிறிது பயன் நம்மால் பயன்படுமானால் அதை விட மகிழ்ச்சி வேறென்ன இருக்க முடியும்!

— **மாநிலன்**

# பொருளடக்கம்

# ஆசிரியரின் பிற நூல்கள்

1. வேமன் சொல்
   — வேமனா தெலுங்கு மொழியிலிருந்து தமிழ் மொழிபெயர்ப்பு

2. திருவேங்கடவன்— திருப்பள்ளி யெழுச்சி
   — வேங்கடவன் சுப்ரபாதம் — தமிழாக்கம்

3. குறளமுது
   — திருக்குறளின் முழுப் பொருள் விளக்கம்

4. திருமலைப் புகழ்
   — திருமலைக் கோயில் வரலாறு

5. அறநெறியே இறைநெறி
   — தத்துவம்

# 1. உண்மையே இறைவன்

காலையில் நாம் எழுந்ததும் கதிரவனைக் கண்டு களிப்பெய்துகிறோம். கிழக்கே பொற்கதிரவன் வரவில்லை அல்லது உதிக்கவில்லையென வைத்துக் கொள்வோம். இருள் நீடிக்கும் என்பதை அறிவோம். இருள் நீடித்தால் என்ன? விஞ்ஞான ஆராய்ச்சியின் பயனாக மின்சாரம் கண்டுபிடித்துள்ளோம்! அதன் துணையோடு கூட வாழ முடியுமே! என்று எண்ணத் தோன்றும். அது எத்தனை நாட்களுக்கு முடியும்? கதிரவன் ஒளி கண்ணுக்கு மட்டும் புலப்படும் ஒளியல்ல. எதிரில் இருப்பதை காண்பதற்கு மட்டும் பயன்படும் நன்மையல்ல. உலக உயிரினங்கள் அத்தனைக்கும் வாழத் தேவைப்படும் மிக முக்கியமான ஒன்று.

இப்படித்தான் நீர். நீரின்றி நாம் ஏதும் செய்ய இயலாது. மின்சாரத் தேவைக்கும் நீர் இன்றியமையாதது. நாம் வாழ மிகவும் தேவையானவைகளில் ஒன்று. உணவின்றி இருந்தாலும் நீர் இன்றி இருக்க இயலாதன்றோ? நீர் இல்லையென்றால் புவியினில் உயிர்களே இல்லையென்று கூட கூறிவிட முடியும்.

அதுபோலவே காற்று. காற்று நின்று விட்டால்...! காலம் முடிந்து விட்டது என்று பொருள் காலமே முடிந்த பின் புவியினில் என்ன இருக்க முடியும்?

வானத்தில் பூமியும், சூரியனும் பல கோளங்களும் இருக்கின்றன என்பது விஞ்ஞான ஆராய்ச்சி மூலம்

அறிந்தது வானம், பூமி, நீர், காற்று, நெருப்பு என்கின்ற இவ்வைந்தும் இல்லையென்றால் எதுவும் இல்லை என்று பொருள்.

இவைகள் எப்படி உருவாயின? இயற்கை என்று எளிதாக கூறிவிட முடியும். அந்த இயற்கை உருவான தால்தான்; புல், பூண்டு, பூச்சிகள், பறவைகள், மிருகங் கள், பின் மனிதன் என்று படிப்படியாக வளர்ச்சி யடைந்து ஆறறிவு படைத்த முழு மனிதனாக வாழத் தலைப்பட்டான்.

முழு மனிதனாக மாறியதும் சிந்தனை எழுந்தது. அந்த சிந்தனை எல்லாவற்றிலும் இன்றுவரை முடிய வில்லை. சிந்தனை முதன் முதலில் அச்ச உணர்வினால் வந்தது. வாழ்வும் வாழ்க்கையும், வாழ்க்கை முறையும் மனிதனுக்குத் தெரியாத நேரத்தே இயற்கையில் கிடைத்த காய், கனி போன்றவற்றையும், மிருகங்களோடு பழகும் போது அவைகள் தின்னும் பலவற்றையும் தின்று வாழ்ந்து வந்தான். எதையாவது தின்று வாழ்ந்த மனிதன் இதைத்தான் தின்ன வேண்டும் என்று அறிவு வளர வளர உணர்ந்தான்.

இப்படி எல்லாவற்றையும் உணர்ந்து கொண்டே வந்தவன் இயற்கையின் எழிலையும் அதனால் மனிதனுக்கு ஏற்படும் பயனையும் கண்டு களித்ததோடு அவைகளை அனுபவிக்க முயன்று வெற்றியும் கண்டான். இயற்கை யாக ஏற்பட்ட புல், பூண்டு, செடிகள், பூச்சிகள், பறவை கள், மிருகங்கள் மனிதர்கள் என்கின்ற எல்லாவற்றிற்கும் முடிவு இருப்பதைக் கண்டு மருண்டான்!

மனிதன் சிந்தனையில் ஆழ்ந்தான்.

மனித சிந்தனையில் ஓர் விந்தையினை அறிந்தான். உருவானது தெரியாது; உருவாக்கியவர் புரியாது. உயிரினங்கள் வாழ காற்று, நீர், நெருப்பு, வானம், பூமி

யென ஐந்தும் அவசியம் என்பதும் இவைகள் தான் விந்தையிலும் விந்தை என்பதையும் உணர்ந்தான்.

இவைகள் உருவானது எப்படி? இந்த இயற்கையும் இதன் விந்தையும் உருவானதற்கு ஏதோ ஒரு மிகப் பெரிய ஆற்றல் இருந்திருக்க வேண்டும். அந்த ஆற்றலை எண்ணி வியந்த மனிதன் அந்த வியப்புக்குரியவற்றின் கர்த்தா வைத்தான் இறைவன் என்று கருத ஆரம்பித்தான்.

இயற்கையை இயற்கையென்று எண்ணி விட்டு விடாமல் அதை உருவாக்கியவன் தான் இறைவன் என்று எண்ணிய மனிதன் இறைவனை ஏன் உருவாக்கினான்? இந்த வினா அனைவருக்குமே எழும். அதற்குக் காரணம் மனிதனுக்கு ஏற்பட்ட அச்ச உணர்வே. காற்று அதிக மாகி புயலாகும்போது மனிதன் வாழ இயலாத நேரத்தில் அவன் உள்ளம் எப்படி இருந்திருக்கும்? மழை அதிகமாகி வெள்ளமாக பெருக்கெடுத்து ஓடும்போது மனநிலை எப்பாடு பட்டிருக்கும்? காரணமே புரியாது தீப்பற்றி எரியும் நிலைகளைக் கண்டபோது அந்த வேதனையை எப்படி விவரிப்பது?

இப்படித்தான் வானத்தில் இருந்து விழும் இடியும், நிலத்தினில் ஏற்படும் நில நடுக்கங்களும் மனிதனால் நிறுத்த இயலாதவைகள்.

இதுபோன்ற இயற்கையின் சீற்றத்தைக் கண்ட மனிதன் என்ன செய்வான்? இவைகள் ஏன் மாறுகிறது? இதனைத் தடுக்க வழியில்லையா? என்று எண்ணி யெண்ணி அழுதிருப்பான், அச்சத்தால் புலம்பியிருப்பான், அந்த அழுகையும் புலம்பலுமே "கடவுளே எங்களைக் காப்பாற்று" என்பதாகவே இருந்திருக்கும்.

இயற்கையை இயற்கையாக, அமைதியாக மனிதன் வாழத் தடையற்றதாக இருப்பதற்கு இறைவனை முதன் முதல் வேண்டிய மனிதன், இன்று வரையிலும்

வேண்டிக் கொண்டேயிருக்கிறான். இன்னும் அவனுக்கு இருக்கும் பல குறைபாடுகளுக்காக, மனிதனுக்கு எப்போதும் ஏதாவது தேவைப்பட்டுக் கொண்டேயிருக்கும். எனவே, அவன் கோரிக்கையைத் தீர்க்க இறைவனைக் கோயில் கட்டியே வணங்க வேண்டிய சூழ்நிலைக்கு வந்து நின்றான்.

கோயில் கட்டி வணங்கினாலும்— பூசைகள் பல செய்து தொழுதாலும், அடுத்தவர் கண்டு வியக்கும் அளவு விழாக்கள் எடுத்தாலும் உண்மை நிலையை மாற்ற யாராலும் இயலாது. அதனால் தான் "உண்மையே இறைவன்" என்கிறோம்.

ஒன்றே குலமாக இருந்த நம் முன்னோர்கள் எல்லாம் நாளடைவில் நான்கு பிரிவுகளாகப் பிரித்து வைத்தார்கள். அதற்குக் காட்டும் காரணங்கள் :

சத்துவ குணம் மேலோங்கி நிற்பவன் பிராமணன்—

சத்துவ குணத்தைவிட இரஜோ குணம் மேலோங்கி நிற்பவன் சத்ரியன்—

தமோ குணத்தைவிட இரஜோ குணம் மேலோங்கி நிற்பவன் வைசியன்—

இரஜோ குணத்தைவிட தமோ குணம் மேலோங்கி நிற்பவன் சூத்திரன்— இது ஆதிசங்கரர் எடுத்துச் சொன்னது.

ஆனால் இவைகளைச் சமநிலைப்படுத்திப் பார்க்காமல் ஒவ்வொன்றும் ஒவ்வொன்றிற்கும் கீழானதாகக் கருதித் தள்ளப்பட்டமையாலும் வர வரத் தகாதவர் என்றும் கீழ்நிலையர் என்றும் ஒரு பிரிவின் வளர்ச்சிக்கே தடையாக இருந்து விட்டனர்.

''குணத்திற்கும் கர்மத்திற்கும் இணங்க வருணம் உருவாக்கப்பட்டு இருப்பதாக கீதை கூறுகிறது. ஆனால்

குணமும், கர்மமும் பிறப்பினால் பரம்பரையாக வருகிறது. வருணம் என்ற விதி பிறப்பை அடிப்படையாகக் கொண்டதல்ல. இங்கே உயர்வு என்ற பொருளுக்கு இடமில்லை. மற்ற வருணங்களுக்குப் பிராமணீயம் என்பது உயர்ந்த இடம் என்ற இறுமாப்பு ஏற்பட்ட அந்த வினாடியிலேயே அது காலால் மிதித்துத் தள்ளுவதற்கு உரியதாகி விடுகிறது" என்று 24—11—1927 'யங் இந்தியா'வில் காந்தியார் எழுதியுள்ளார்.

அன்று கூறப்பட்ட வருணமுறைகளும்; இன்று நமது சமுதாய அமைப்பில் உள்ள சாதி முறைகளும் கேலிக் கூத்தானதாகி விட்டது. இன்றைக்கு இல்லார் இருப்பர் என்பதே மேலோங்கி உள்ளது.

அன்று சமூகத்தின் தேவைகளை மனதிற்கொண்டே வருணங்கள் பிரிக்கப்பட்டன. அறிவு ஆன்மீகம் சம்பந்தமானவை, தற்பாதுகாப்பு, புத்திசாலித்தனமான பொருளாதார பரிவர்த்தனை, தொழிலாளர்களின் உழைப்பினால் செல்வத்தை உற்பத்தி செய்தல்.

சொத்து எதுவும் வைத்துக் கொள்ளாத அம்சத்துடன் ஆன்மீக சக்தியும் தன்னலமற்ற மனமும் பிராமணனது செல்வமாக இருந்தன.

சமூகத்தின் பாதுகாப்புக்குச் சேவை புரியும் ஆற்றல் சத்திரியனுக்கும், சமூகத்தின் நலனுக்காக பொருளாதார வளர்ச்சியில் நாட்டம் கொண்டு வாணிபம் செய்பவனாக வைசியனும், சமூகத்தின் நன்மைக்காக உடல் உழைப்பும் ஆதரவும் தருவது தனது உரிமையாக சூத்திரனுக்கும் இருந்தது

தூய்மையோ அல்லது தருமமோ யாருக்கும் ஏகபோக உரிமையில்லை. ஒருவன் ஒழுங்குடனும் தன்னலமின்றியும் தனது கடமையைச் செய்வதன் மூலம் மேல் நிலை அடையலாம். சமூகத்தில் அனைவரைக் காட்டிலும்

சிறந்தவனாக வாழ்ந்து பிறருக்கு வழிகாட்டுபவனாகவும் இருக்கலாம்.

கர்மங்கள் அல்லது செயல்கள் பல்வேறு சமூகங்களின் இயல்பான குணங்கள் என்று கீதையில் பொதுவாகக் கூறப்பட்டிருக்கிறது.

"வாழ்க்கையில் தருமம் என்பது எல்லோர்க்கும் ஒன்றுதான். அதாவது, பிறருடைய மனத்தைப் புண் படுத்தாமல் இருத்தல், உண்மை, திருடாமை, கோபத்தி லிருந்தும் பேராசையிலிருந்தும் விடுதலை, மனித வர்க்கத் திற்கு நன்மை செய்யவேண்டுமென்பது ஆகிய குணங் கள். தாழ்ந்தவர்கள் உயர்ந்தவர்கள் ஆகிய எல்லோர்க் கும் பொதுவான தரும விதிகள்" என்று பாகவதப் புராணம் சொல்லுகிறது.

ஒருவன் செய்யும் தொழிலுக்கும் அவனுடைய அறிவுக்கும் சம்பந்தம் இல்லை. கசாப்புக் கடைக்காரன் களெல்லாம் வீரமானவர்கள் என்று சொல்லிவிட முடியாது. அதே நேரத்தில் புத்தியில்லாதவர்கள் என்றும் சொல்ல முடியாது. அதே போல், வீதியில் குப்பை எடுப்பவன் எல்லாம் சுத்தம் அறியாதவன் என்றோ, ஒழுக்கம் இல்லாதவன் என்றோ, அறிவற்றவன் என்றோ சொல்ல முடியாது. "செய்யும் தொழிலே தெய்வம்" என தனது கடமையை ஒழுங்காகச் செய்கின்ற எவனுக்கும் எதிலும் மன நிறைவு கிடைக்கும். உள்ளத்தில் மகிழ்ச்சி கிட்டும். இவர்களில் பலருக்கு இறை பக்தியும் இருக்கும்.

கோயிலினுள் மூலவர் சிலையருகே நின்று பூசை செய் கின்றதாலேயே அவர்கள் எல்லோருமே ஒழுக்க சீலர்கள் என்று சொல்ல முடியாது.

தன்னுடைய தீய எண்ணத்தை மறைக்கவே பயபக்தி யுடையவனாகத் தோற்றமளிப்பவரும் உண்டு. தன் னுடைய கடமையைச் செய்வதுபோல் நடிப்பவரும்

உண்டு. இறை பக்தியும் அருள் நிறைந்தவர்களாகவும் பலர், குலம் மாறுபட்டவர் என்று தள்ளி வைத்தாலும் அதில் தோன்றியுள்ளனர். கண்ணப்பர் (வேடுவர்), நந்தனார் (ஆதி திராவிடர்), திருநீலகண்டர் (குயவர்), துக்காராம் (வேளாளர்) இப்படி பல பேர்களை எடுத்துக் காட்ட முடியும்.

சாதி பாகுபாடு இன்றி ஒவ்வொருவரும் தருமத்தைக் கடை பிடித்து சமுதாய ஒழுக்கத்தையும் கடமையையும் செய்து முடிக்க வேண்டியவர்களாவர். 'நிர்ணயிக்கப் பட்ட கடமை' என்பது அனைத்து மக்களுக்கும் பொதுவானதேயாகும்.

நிர்ணயிக்கப்பட்ட கடமைகளை பற்றுதலின்றியும், தன்னலமின்றியும் செய்து முடிப்பதுதான் சிறந்த அறமாகும்.

நாம் நமது முழு பலத்தையும் செலுத்தி உழைக்க வேண்டும். ஆனால் பலனைப்பற்றி சிந்தனையே இல்லாமல் நம்முடைய உழைப்பைப் பணிவுடன் செய்தல் வேண்டும். சிறந்த செயலாயினும் தன்னல நோக்கத்தோடு செய்யப்படுமேயானால் அது வெறும் சூன்யமான செய லாகிவிடும் என்பது உண்மை.

**"ஒழுக்கம் உடைமை குடிமை இழுக்கம் :**
**இழிந்த பிறப்பால் விடும்"** — குறள் : 133

ஒழுக்கம் உடையவர் தாழ்த்தப்பட்ட குலத்தாரா யினும் உயர்வு உடையவராவார். உயர்ந்த குலம் என்று சொல்லிக் கொண்டு வாழுகின்ற குலத்தவராயினும் இழிவான ஒழுக்கமின்மையுடையவரானால் அவர் பிறப்பே இழிவாகக் கருதப்படும்.

நீரில் தோன்றும் நிறமும், சுவையும் நீர் சார்ந்திருக்கும் மண் வளத்தைப் பொருத்தவைகளாகவும் இருக்கும். நிறமும் சுவையும் நீருக்குச் சொந்தமல்ல.

**சாதி விடாத குணங்கள் நம்மோடு**
**சவித்திடும் ஆகாதே** - (திருவாசகம் திருப்படை ஆட்சி)

சாதியை விட்டுப் பிரிக்க முடியாத முக்குணங்களும் அவைகளின்றும் உருவெடுத்து வருகின்ற சாதி பேதங் களும் பற்றற்ற நிலையில் இடம் பெறுவதில்லை. இது மாணிக்கவாசகப் பெருமானின் கருத்து.

சாதியை ஒழிக்க இராமகிருஷ்ணர் இரவு நேரங் களில் தட்சணேசுவர ஆலயத்துக்கு அருகில் உள்ள தாழ்த்தப்பட்ட சேரிக்குச் சென்று தனது தலை முடியால் அவர்களிடத்தைச் சுத்தம் செய்வாராம்.

''தாயே! மக்களால் ஒதுக்கப்பட்டவர்களும் உன் குழந்தைகளே. நான் அவர்களை விட உயர்ந்தவன் என்னும் வேதனை என் உள்ளத்தை விட்டு அறவே அகல வேண்டும்" என்று வேண்டி சாதியால் ஏற்படும் சச்சரவுகளை ஒழிக்க முனைந்தாராம்.

இப்படி பல அறிஞர்களும், பெரியார்களும், பேரறிஞர்களும், 'ஞானிகளும், நமது நாட்டில் தோன்றி 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்றும் இறைவன் படைப்பில் மனித குலம் எல்லாம் ஒன்றே என்றும்; உயர்வு தாழ்வு எனும் பாகுபாடு அற்ற சீரான, சிறப்பானதொன்று என்றும் ஆதிகாலம் தொட்டு இன்று வரை எடுத்துச் சொல்லி மக்களை விழிக்க வைத்தனர். ஆனால், மக்கள் இன்னும் விழித்ததாகத் தெரியவில்லை.

கீழ் மக்கள் என்று ஒதுக்கி வைக்கப்பட்ட வட நாட்டவர்களை கை தூக்கி வைத்தது இஸ்லாமிய

படையெடுப்பு. தென்னாட்டில் கீழ் மக்களாக ஒதுக்கி வைக்கப்பட்டவர்களை கை தூக்கி வைத்தது கிறித்துவப் படையெடுப்பு. இந்த நேரங்களில் தான் தனது கீழ் நிலை மாற— வாழ்க்கைப் பிரச்சனைகளைத் தீர உண்ண உணவு— கற்கக் கல்வி— வாழ இயலாதார்களை வாழ வைக்கும் முயற்சி, இவைகளைத் தந்து நமது நாட்டில் இஸ்லாமும்— கிறித்துவமும் வளர்ந்தது. அவைகள் வளர்ந்தது என்றால் மக்கள் மாறினர். மாறினர் என்றால் மதம் மாறினர். யார் எந்த மதத்தில் மாறினாலும் 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' எனும் உண்மையில் இருந்தும்— தெய்வ சிந்தனையின் உண்மைப் பொருளையும் நாம் மறுப்பதிற்கில்லை.

யார் எங்கு எப்படி எந்த நிலையில் வாழ்ந்தாலும் தெய்வ சிந்தனை என்பது அனைவருக்கும் அவசிய மாயிற்று. அதில் பிரிவு இல்லை, வேற்றுமை இல்லை.

# 2. உலகமும் மக்களும்

**''அகர முதல எழுத்தெல்லாம் ஆதி**
**பகவன் முதற்றே உலகு''**

தமிழ் மொழி உயிரெழுத்துக்களின் முதல் எழுத்தாகிய 'அ' என்னும் எழுத்து உள்பட மூலத்தில் எழுகின்ற ஆதார அகர தொனியையே சொல்லின் முதலாகவும், சொல்லாகவும் இருந்து முடிகின்றது. ஆதலின் 'அகர முதல எழுத்தெல்லாம்' என்றது உயிரெழுத்துக்களின் முதலெழுத்தாகிய 'அ' எனும் எழுத்தே முதன்மையாக இருப்பது போன்று, ஆதி எனும் மெய்ப் பொருளே உலகத்தின் முதல் ஆகும் என்பதேயாகும். எனவே திருவள்ளுவர் ''ஆதி பகவன் முதற்றே உலகு'' எனக் கூறி வைத்தார்.

**''பரமாய சக்தியுள் பஞ்சமாபூதம்**
**தரமாறிற் றோன்றும் பிறப்பு''**

என்று ஔவையார் குறிப்பிட்டார்.

''பெரு வெளியாய் ஐம்பூதம் பிறப்பிடமாய்'' என்று தாயுமானவர் கூறினார்.

**''பூதங்கள் ஐந்தாகிப் புலனாகிப் பொருளாகிப்**
**பேதங்கள் அனைத்துமாய் பேதமிலாப் பெருமையன''**

**பாரினில் ஐந்தாய் பரந்தாய் போற்றி**
**நீரினில் நான்காய் நிகழ்ந்தாய் போற்றி**

**தீயினில் மூன்றாய் திகழ்ந்தாய் போற்றி**
**வளியினில் இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி**
**வெளியினில் ஒன்றாய் விளைந்தாய் போற்றி !**

என்று மாணிக்க வாசகர் கூறியுள்ள மெய்ம்மொழிகளும் மேற்கூறிய மெய்ப் பொருளே உலகத்தின் மூலமாகவும், உலகம் அனைத்துமாகவும் தோன்றியுள்ள உண்மை யாகும்.

**''வேண்டுதல் வேண்டாமை இலான் அடி சேர்ந்தார்க்கு**
**யாண்டும் இடும்பை இல"** —குறள்

உருவம், பெயர், உணர்வு, கரணம், குணம், குறி செயல் ஆகிய ஒன்றுமில்லாததும் ; அதனால் வேண்டும், வேண்டாம் என்பது இல்லாததும் இருப்பதும் ஆகிய நிலையுணர்ந்து உலக அநித்திய உணர்வு விளங்கப் பெற்றுள்ள தன்மையில் விருப்பு வெறுப்பு இரண்டுமற்ற அருள் நிறையுள்ளத்துடனும் வேண்டுதல் வேண்டாமை யின்றி அமைந்து சாதனைகளையுணர்ந்து தெளிந்து அனுபூதியில் நிலைத்து, தானும் வேண்டுதல் வேண்டாமை இலாது வாழ்ந்து இறைநிலை சேர்ந்து விளங்குகின்ற மக்களுக்கு எங்கும் எப்போதும் பிற துன்பத்தின் இன்னல் இல்லையாகும்.

பொறி, புலன்கள், கரணங்கள் கூடிய உடம்பை யெடுத்து பொறிகளின் வாயிலாக உணர்கின்ற புலன் களாகிய சுவை, ஒளி, ஊறு, ஓசை மனம் என்னும் ஐந்தினது நுகர்ச்சியினைப் பொய்யுலக வாழ்க்கைச் சார்பாகவே மேற்கொண்டு வாழ்தலின்றி சமரச சன்மார்க்க மெய்நெறியைக் கடைபிடித்து மெய்ப் பொருள் நன்குணர்ந்து புலன்களின் நுகர்ச்சிகளைத் தன் வசமாக்கி வாழ்கின்ற மெய் நெறியாளரின் பொய்யுலக வாழ்க்கையான போக மோகம் தீரப் பெற்ற ஒழுக்கங்களை மேற்கொண்டு இக வாழ்க்கையைப் பர

வாழ்க்கைக்குரிய நெறியுடன் நின்று ஒழுகுபவர் நித்திய மாகிய பேரின்ப பெருவாழ்வில் நிலைத்து வாழ்வார்கள்.

பேரின்ப பெரு வாழ்வினைத் தருகின்ற பக்தி மார்க்கத்தின் கடைப் பகுதியான ஞானம் எனும் ஆத்ம விசாரணையாகிய தன்னையறிதலே முறையாகும். அப்படி தன்னை அறிதல் மூலம் தலைவன் நிலையாகிய மெய்ப் பொருளையும் அறிந்து அப்பொருளே தானாகிய உயிராகவும் மற்ற உலகம் அனைத்தும் ஆகவும் நடித்துக் கொண்டிருப்பதை அறிகிறான். எனவே, இறைவனைத் தவிர்த்து இவனும் மற்றெதுவும் இல்லாத தனிமையை உணர்கிறான். இந்நிலையில் 'தான்' என்று தனித்தில்லாத உண்மையினால் 'நான்' என்று சொல்லிக் கொண்டிருப்ப வன் தலைவனில் ஐக்கியமாகி தான் அவனாகி தனக்கு உவமை வேறொன்றுமில்லாத அந்தத் தலைவனே யாகின் றான்.

**ஜீவன் சிவன் என வேறில்லை**
**ஜீவனார் சிவனாரை யறிந்திலர்**
**ஜீவனார் சிவனாரை அறிந்தபின்**
**ஜீவனார் சிவனாயிட் டிருப்பாரே !**

—திருமந்திரம்

"தன்னையும் தனக்காதாரத் தலைவனையுங் கண்டா னேல், பின்னையத் தலைவன் தானாய் பிரம்மமாய் பிறப்புத் தீர்வன்."

இப்படி, தனக்குவமையில்லாத தலைவனேயான பிரம்ம ஞானியினுடைய போதனை சாதனைகளை மேற் கொண்டு அன்னவரின் அறிவாற்றல், செயலாற்றலாகிய தன்மைகளைப் பின்பற்றி சாதிப்பவர்களுக்கல்லாமல் 'நான்' 'எனது' என்னும் செறுக்காகிய மயக்கத்தினால் செயல் பட்டதின் பிரதிபலிப்பால் விளைந்த மனக்கவலை மாற்றுவது அரிது.

எங்கே யாரிடம் எப்படி எனும் மெய்ப்பொருளுணர்ந்து, எப்பொருளும் எவ்வுயிரும் மெய்ப்பொருளின் உருவமே எனவும் அறிந்து எவ்வுயிரையும் தன்னுயிர் போல் எண்ணி எவ்வுயிர்க்கும் உறுகண் செய்யாமல், நன்மையே யெண்ணி, சொல்லி, செய்து அறமே வடிவமாய் அமைந்து வாழ்கின்ற பரம குருவினது அடிச்சுவடுகளாகிய அறிவாற்றல், செயலாற்றல் என்னும் சொல், செயல்களை அவர்கள் மூலம் கற்று ஒழுகினார்க்கல்லாமல் பிற ஆழி என்னும் அறநிலைக் கெதிராகிய அஞ்ஞானத்தின் செயல்களால் பிரதிபலிக்கின்ற பிறவித் துன்பமாகிய கடலை நீந்திக் கடப்பது அரிது.

எனவே எத்தகையத் துன்பம் வரினும் அடுத்தவர்க்கு தீங்கு விளைவிக்காத நன்மைகளையே செய்து பழக வேண்டும் அப்படிப்பட்ட மேலான குணம் நம்முள் பெறுக வேண்டி தன் ஞானத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

**"நுண்ணறி வின்மை வறுமை அஃதுடைத்துப்**
**பண்ணப் பனைத்த பெருஞ்செல்வம்"**

—நாலடியார்

உலகில் அருட்செல்வம், பொருட் செல்வம் ஆகிய இரண்டும் இல்லாத வறுமையாளர்களே பெரும்பாலோராக இருப்பதற்குக் காரணம் பேரறிவுப் பதமாகிய ஆன்ம ஒளியினைத் தருகின்ற நோற்றல் எனும் ஆன்மீகப் பயிற்சியை மேற்கொள்பவர்கள் மிகச் சிலராகவும், கொள்ளாதவர்கள் மிகப் பலராகவும் உள்ளதேயாகும். அதாவது, மெய்யுணர்வு இன்மையே வறுமைக்குக் காரணம். மெய்யுணர்தலால் ஆன்ம ஒளியாகிய மெய் விளக்கு ஏற்பட்டு, வறுமை எனும் இருளை அகற்றி, அமைதி இன்பத்தை அடையலாம்.

உலகில் பெருமைக்குரிய பகுத்தறிவாகிய ஆறாவது அறிவையும் பெற்றுள்ள மாந்தர் அடைய வேண்டிய

செல்வமானது செல்வத்திற்கெல்லாம் மேலான செல்வ மாக, மானிடத்தின் இலட்சியமான பேரின்பப் பெருவாழ் வில் ஞானம் என்கிற பேரருட் செல்வமாகும். மற்றதாகிய பொருட் செல்வம் பெரியோர்களால் மதிக்கப்படாததும், தனக்கும் பிறர்க்கும் கேடு விளைவிக்கின்ற பொய்யுலக அற்பர்களிடம் இருக்கும்.

அனைவரும் அவசியம் பெற வேண்டிய செல்வம் அருட்செல்வம். அருட்செல்வம் என்கிற பேரறிவைப் பெற்றால் இவ்வுலக வாழ்க்கையே இன்பமாகத் தோன் றும். எத்தகைய இன்னல் வந்துற்ற போதும் அது மிக எளிதானதாகவும், சுமையற்றதாகவும் இருந்து தனது வாழ்க்கையைப் பாழாக்காதும் இருக்கும். நெஞ்சில் உறுதியினைத் தரும்.

பொருட் செல்வமானது போவதும் வருவதுமாகிய நிலையில் இயல்பாக உடையதாகும். ஆதலின் பொருட் செல்வம் பெறாதவரும். பெற்றிருந்து இழந்தவரும் பின்னொரு காலத்தில் பொருட்செல்வம் பெறுவர். ஆனால் அருட்செல்வம் பெறாதவர் தன்னலம், ஆசை, மோகம், உயர்வு-தாழ்வு மனப்பான்மை, வஞ்சகம், பகை, பிணக்கு, அச்சம் இவைகளால் தானும் துன்புற்று அமைதி யின்றி பிறர்க்கும் துன்பம் செய்துகொண்டு இருப்பாரே யன்றி அருள் நிறைந்தவராக மாறுவதற்கு வழியே இருக்காது.

**"காடுங்கரையும் மனக்குரங்கு**
**கால்விட்டோட அதன் பிறகே**
**ஓடுந்தொழில் பயனுளதோ**
**ஒன்றாய்ப் பலவாய் உயிர்க்குயிராய்**
**ஆடுங்கருணைப் பரஞ்சோதி**
**யருளைப் பெறுதற் கன்புநிலை**
**தேடும் பருவம் இதுகண்டீர் சேரவரும் செகத்தீரே !"**

எனும் தாயுமானவரின் மெய்மொழிப்படி, மனம் போன வழியெல்லாம் போகாமல் சிந்தனையுணர்வாகிய தெளிவி

னால் தீமைகளையுணர்ந்து பேரின்பம் பயக்கின்ற மெய் ஞானமாகிய பகுத்தறிவைப் பெற்றுள்ள இம் மானிடப் பிறவியாகிய பருவத்தைப் பயன்படுத்தி அன்பும் இறைவ னும் ஒன்றாகிய உண்மை நிலையில் நிலைப்பதே அறிவின் பெருமையாகும்.

எதைப் பற்றியும் எவர் எவர் வாய்மூலம் கேட்டா லும், எந்த நிலையில், எந்த முறையில் சொன்னாலும் அந்தப் பொருளின் முடிந்த பொருத்தமான உண்மைக் கருத்தை அறிந்து கொள்வதே அறிவின் இலக்கணம்.

தன்னையறிந்த மெய்யறிஞர்கள் எப்பொருளுக்கும் உட்பொருளாகிய மெய்ப் பொருளை அறிகின்ற நுண் மாண் நுழைபுலனாய் ஆய்வுத் திறனுடைய அறிவுக்கும், பெருமைக்கும் உரியவர் ஆவர்.

மெய்ப்பொருளுணர்ந்து அமைதி நிறைந்திட சாதித்து உயர்ந்தோராகிய மெய்யறிஞர்கள் வரிசையில் உலகம் எவ்வழி சென்றதோ, செல்கின்றதோ அவ்வழியைப் பின்பற்றி நின்று ஒழுகி உயர்ந்து விளங்குவதே அறிவின் இலக்கணம் ஆகும்.

அதுவரை தன்னை யறியாமலிருந்த மன மாய மயக்கத்திலிருந்து தன்னையறிதல்மூலம் தன்னையும் தன் தன்மையும் அறிந்து தற்பதமாகிய மெய்பதமடைந்து விளங்குவதே அறிவின் திறனாகும்.

தோன்றி, நின்று, மறைந்து, கொண்டிருக்கின்ற நிலை யில்லாத உலகப் பொருள்கள் அனைத்தும் நிலையுள்ள தாக எண்ணி யாவும் அநித்தியம் என்பதை நினைவு கூறாமல், பெரும்பாலோர் நிலையுள்ளதாகிய வீடு பேரின்பத்தை இழக்கின்றனர். இவர்கள் தம்மில் அடையப் பெற்றிருக்கின்ற பகுத்தறிவைப் பயன்படுத்தாத அற்ப அறிவுடையவரும் மனிதப்பிறவிக்குரிய ஆண்மை யாகிய பேரறிவைப் பெறாத தாழ்ந்த நிலையுடையவ ராகவும் ஆகி விடுவர்.

தன்னிடம் செல்வம் இருக்கின்றது என்கின்ற செறுக்கினை அறவே ஒழித்திடல் வேண்டும். கதையின் நீளத்திற்கொப்ப நாடகம் நடக்கும். நாடகம் முடிந்தால் கூட்டம் கலையும். நாடக அரங்கும் வெற்றிடமாகும். இதைப் போலவே ஒருவரிடம் வந்து சேர்ந்த செல்வமும் அவரை விட்டு சென்று விடும்.

"உடைமையும் வறுமையும் ஒரு வழி நில்லா" எனும் முதுமொழிக்கொப்ப செல்வமானது நிலையில்லாதது என்பதை உணர்ந்து, செல்வத்தை அவாவின்றி நேரிய முறையில் அளவுடன் போதுமென்ற மனதுடன் ஈட்டி பயன் கொண்டு வாழ்தலே சிறப்பும் அமைதியின்பத்தை அளிப்பதும் ஆகும்.

உலகியல் கூற்றில் 'நேற்று இருந்தவன் இன்றில்லை' என்னும் உண்மையை மிகுதியாகக் கொண்டதே இவ்வுலகம். இதனால் சாதாரண அனுபவமே உடல் நிலையாமையை வெளிப்படையாக உணர்தல் வேண்டும். இதை மக்கள் நினைவு கூர்ந்து ஏமாற்றம் அடையாமல் உடல் வீழ்ச்சிக்குமுன் வீட்டின்பத்திற்குச் சாதனைகளை மேற்கொள்ள வேண்டும் என்பதில் எச்சரிக்கையாக இருத்தல் வேண்டும்.

துன்பம் என்பது மாறுவேடத்தில் வந்துள்ள ஆசீர்வாதம். துன்பம் ஒருவன் கண்ணைத் திறந்து விடும் கருவி. துன்பம் நமக்கு ஒரு மௌன குரு. நமது மனதைத் தெளிய வைப்பதும் துன்பம் தான். அஞ்சாமல் நமது இன்னல்களை ஒவ்வொன்றாக வென்று வர வேண்டும். அதில் நாம் அழுத்தமாக இருக்க வேண்டும். நமது இன்னல்களையும் அதனால் ஏற்படும் துன்பங்களையும் சிரித்து ஒதுக்க வேண்டும். எப்பொழுதும் மகிழ்ச்சியுடன் இருக்கப் பழக வேண்டும். புதிய பெருந்தன்மையான குணத்தை விருத்தி செய்துகொண்டு சிரித்து வாழ முயல வேண்டும். "நாம் மகிழ்ச்சியாகவே இருக்கிறோம்" என்று நம்ப வேண்டும். எந்தக் காரணத்தைக் கொண்டும்

துன்பம் சூழ்ந்தது என்பதைப் பிறர் அறியாத வகையில் உள்ளத்தில் உறுதியுடன் இருப்பது சிறந்தது.

கொந்தளிக்கும் உணர்ச்சிகளையும், துடிப்புகளையும் கட்டுப்படுத்துங்கள். உங்கள் சக்திகளை, நீங்கள் தேர்ந்தெடுத்த இலட்சியத்தை நோக்கிச் சரியான பாதையில் திரட்டித் திருப்பி விடுங்கள். தன்னடக்கச் சக்தியை விருத்தி செய்யுங்கள். இயற்கை உணர்வுகளை இசைவோடு வைத்திருங்கள் உங்கள் எண்ணங்களை நன்கு ஆராயுங்கள் மன அமைதியை வளர்த்து வாருங்கள். உங்கள் சக்தியை சேமித்து வையுங்கள். உங்கள் உடன் பிறந்த குணத்தை ஒன்று திரட்டுங்கள். நீங்கள் அளவு கடந்த மன அமைதி காணுவீர்கள். உங்களிடம் அபாரமான அந்தரங்க சக்தி திகழும். உங்களிடம் துரிதமான வளர்ச்சி காணப்படும்.

வெறும் புத்திக் கூர்மையும், புத்தக அறிவும் இருந்து விட்டால் போதாது. இனிமையாகவும், அன்பாகவும் கோபப்படாமலும், மற்றவர் உள்ளத்தில் குடி கொள்ளும் கலையை உணர்ந்தும் இருப்பவன் எவனோ அவன் தனது முயற்சிகள் அனைத்திலும் வெற்றி பெறுவான். அவன் தான் மகிழ்ச்சியுடனும் அமைதியாகவும் திகழ்வான்.

அன்பு அலைகள் உங்கள் உள்ளத்தில் இடைவிடாது எழுவதற்கு இடம் கொடுங்கள். இறை அரவணைப்பின் சுகத்தை உணருங்கள். நிரந்தர வாழ்வின் பெரும் மகிழ்ச்சியினைச் சுவைத்துப் பாருங்கள். இறையருள் தானாக உங்களை வந்தடையும்.

மரத்திலேயே பழுக்கும்படி விட்டுவிடக் கூடிய பழம் மிகவும் சுவையாக இருக்கிறது. ஆனால் அதற்கு நீண்ட காலம் பிடிக்கும். பல்லாண்டு காலம் மெதுவாக வளர்ந்து வரும் மரம் மிகுந்த பலம் பொருந்தியதாகி பல்வேறு காரியங்களுக்குப் பயன்படுகிறது.

அதே போல நீண்ட காலம் பொறுமையாகக் கடுமை யான சாதனை செய்துவரும் சாதகன், நாளடைவில் சக்தி பொருந்திய பூரண யோகியாகத் திகழ்வான். இந்தக் கால யோகிகள் பொறுமையற்றவர்கள். அவர்கள் ஒரு சிறிது பிராணாயாமமும், தியானமும், சிரசாசனமும் செய்துவிட்டு இரண்டு அல்லது மூன்று ஆண்டுகளில் யோகிகளாக ஆகி விடுகின்றனர். அவர்களுக்கே புரியாத பலவற்றை அவர்கள் எங்கே அடுத்தவர்களுக்கு எடுத்துச் சொலவது ?

நாமும் யோகியாக வேண்டும் என்று அளவுக்கு மிஞ்சி உங்கள் உணவுகளைக் குறைத்துக் கொள்ளத் தேவையில்லை. அதனால் உடல் நலிவு ஏற்படுமேயன்றி, உண்மையான தியானத்தைக் கடைபிடிக்கும் வலிவுகூட உடலில் இருக்காது. துணிவும் பொறுமையும், விடா முயற்சியும் எந்த நல்ல பழக்கங்களை மேற்கொண்டா லும் வெற்றி பெறுவது திண்ணம்.

ஒரு உண்மை என்னவென்றால் நமது நாட்டில் பல காலமாகவே இருந்துவரும் நல்ல பழக்க வழக்கங்கள்— அதாவது ஒழுக்கத்திற்கான உடற்பயிற்சி, தியானம், யோகம், பொறுமை இவைகளுக்கான வழிகள், வழி முறைகள், உண்மையுணர்வு— அன்பு உள்ளம் போன்ற வற்றின் நன்மைகள் எல்லாம் நமது நாட்டின் நல்லாசிரி யர்கள்— அறிஞர்கள் எழுதிய புத்தகங்களை விட்டு மேலை நாட்டு அறிஞர்கள் எழுதுகின்ற நமது நாட்டு முறை களையே ஆங்கில மொழியில் ஏதாவது ஒரு மேனாட்டு பல்கலைக் கழக பேராசிரியர்கள் எழுதி அது வெளி வந்தால் நம் நாட்டு இளைஞர்கள் அதனைத் தேடிப் பிடித்து மிகவும் மகிழ்ச்சியாக வாங்கிப் படிப்பார்கள். மேலும் அதனை நாகரிகமாகவே கருதுவார்கள். உண்மை யின் அருகே இருப்பது ஏனோ அவர்களுக்குப் புரிவது இல்லை. புரிந்து கொள்ளும் மனப்பக்குவமும் இல்லை. நம்மை நாமே மதிக்கும் பழக்கம் இல்லாமையே இதற்குக் காரணம்.

# 3. மனித வாழ்க்கை

ஒரு சோதிடன் ஓர் அரசனிடம் சென்று 'நீங்கள் ஆறு மாதத்தில் இறந்து விடுவீர்கள்' என்று கூறினான். அரசன் அதைக் கேட்டதும் அச்சத்திற்கு ஆளானான். உயிர் மீது ஆசையில்லாதார் யாருளர்? அரசனுக்கும் மனக்கவலை வந்து விட்டது. அச்சமே அரசன் சாகின்ற நிலைக்குக் கொண்டு நிறுத்தியது இது அமைச்சனுக்குத் தெரிந்தது. பொதுவாக அமைச்சர்கள் அந்தக் காலத்தில் புத்திக் கூர்மையுள்ளவர்களாகவே இருப்பார்கள்.

அரசனைக் கண்டு பெரிதும் கவலையுற்ற அமைச்சன் 'அரசே சோதிடர்கள் கூற்றை நம்பாதீர்கள். அவர்கள் அறிவிலிகள் என்று எடுத்துக் கூறினான். இருந்தாலும் அரசனுக்கு அமைச்சர் சொல்லில் நம்பிக்கை வரவில்லை. அமைச்சன் சிந்தித்தான். சோதிடனை வரவழைத்து அவன் ஓர் அறிவிலி என்பதை அரசனுக்குக் காட்ட வேண்டும் என்று தீர்மானித்தான். சோதிடனை அரண்மனைக்கு வரவழைத்தான் அமைச்சர் சோதிடனைப் பார்த்து நீங்கள் கணித்தது சரிதானா? என்று கேட்டான். நான் கணித்ததில் ஒரு தவறும் ஏற்படாது. இருந்தாலும் நீங்கள் கூறுவதை முன்னிட்டு மீண்டும் ஒருமுறை அரசனுடைய ஜாதகத்தைப் பார்க்கிறேன் என்றான். பார்த்த பின் தான் கணித்தது முற்றும் சரியே என்று கூறினான்.

அரசனுக்கு கவலை அதிகரித்தது. அச்சம் சூழ்ந்தது உடனே அமைச்சர் "சோதிடரே உங்களுக்கு மரணம் எப்போது என்று கணித்து வைத்துள்ளீரா ?" என்று கேட்டார்.

அதற்கு சோதிடன் 'எனக்கு இன்னும் பன்னிரெண்டு ஆண்டுகள் மரணம் வருவதற்கு உள்ளன' என்று கூறினான் உடனே அமைச்சன் தன்னுடைய வாளையுருவி சோதிடனுடைய கழுத்தை வெட்டி அவனை மாய்த்து விட்டு,

"அரசே ! இப்போது என்ன சொல்லுகின்றீர். பன்னிரெண்டு ஆண்டுகள் மரணமில்லை என்றவனுக்கு முடிவு என்னவாயிற்று, யார் முடிவும் யார் கையிலும் இல்லை. இந்த நாடும் நாட்டு மக்களும் செழித்து வாழ நீங்கள் உயிரோடு பல காலம் வாழ்ந்து கோலோச்ச வேண்டும், அதுமட்டுமல்ல மூடநம்பிக்கை உங்களுக்கே வந்துவிட்டால் நாட்டு மக்கள் என்னாவது ? என்று கூறி அரசனை சமாதானப்படுத்தினான்.

அரசன் மகிழ்ச்சியால் அமைச்சனைப் பாராட்டி, நீண்ட நாட்கள் வாழ்ந்ததாக கதையுண்டு.

எது எப்போது நடைபெறுமோ அப்போதே நடைபெறும் என்று நம்புகின்றவர்கள் இடையில் இப்படிப் பட்ட மூடநம்பிக்கைகளில் அடுத்த மனிதர்களின் சொல் கேட்டு அஞ்சுவது தேவையற்றது. அவைகள் தன்னுடைய அன்றாட வாழ்வின் வேகத்தைத் தடுத்து நிறுத்தி தவறுகளுக்கு வித்திடும். எனவே மனித வாழ்வில் வேகமும் வேண்டும், விவேகமும் வேண்டும்.

உலக வாழ்வு மனிதனுக்கு நல்லதா கெட்டதா எனும் கேள்வி எழுகிறது. இவ்வுலக வாழ்வு நல்லது என்றும் சொல்ல முடியாது, கெட்டது என்றும் சொல்ல முடியாது.

நல்லது என்று அதைப் பின்பற்றவும் முடிவதில்லை. கெட்டது என்று ஒதுக்கி விடவும் முடிவதில்லை.

அறநெறியில் இருந்து இவ்வுலக வாழ்வு நம்மை கீழ்நிலைக்குக் கொண்டு செல்கிறது; கீழ்நிலையில் உள்ள நாம் அறநெறி நிலையை அடைவதற்கு இவ்வுலக வாழ்வைப் பயன்படுத்தியாக வேண்டும்.

**திடம் உறவேநின் அருளைச் சேர்த்து**
**என்னைக் காத்து ஆள**
**கடன் உனக்குஎன்று எண்ணி, நின்னைக்**
**கைகுவித்தேன் நான் அவனோ ?**
**அடைவு கெட்ட பாழ்மாயை ஆழியிலே**
**இன்னம் அல்லல்**
**படமுடியாது ; என்ஆவிப் பற்றே பராபரமே!**

எனவே இவ்வுலகை நம்பி வாழவும் முடியவில்லை ; அறவே இதைப் புறக்கணிக்கவும் முடியவில்லை. ஆகையால் இந்த உலக வாழ்விற்கு "அடைவு கெட்ட" என்னும் அடைமொழியைத் தாயுமானவர் சொன்னார். அடைவு என்றால் 'முறை' என்பது பொருள். ஒரு முறை யில்லாத என்பது பொருளாகிறது.

உலகம் மூன்று குணங்களாக உள்ளது. மாயை என்னும் உலக வாழ்வு நெருப்பில் இருந்து எப்படி சூட்டினைப் பிரிக்க முடியாதோ அப்படி மாயையிலிருந்து மூன்று குணங்களையும் பிரிக்க முடியாது. மாயை என்பது விளக்க முடியாத பெரிய சக்தியாக இருக்கின்றது. கடலின் ஆழத்தைக் காணமுடியாது. அதுபோல மாயை யின் சக்தியை அறிய முடியாது.

துன்பம் நிறைந்தது உலக வாழ்வு. அது இன்பம் நிறைந்ததாக நாம் கருதுகிறோம். பிறப்பையே இன்ப மாகக் கருதுகிறோம். ஆனால் அது மரணமெனும்

துன்பத்தில் போய் முடிகிறது. மரணமில்லாத வாழ்வில்லை; துன்பம் இல்லாத இன்பம் இல்லை. இவ்வுலக வாழ்வில் அறிவைக் கொண்டு நாம் தேடும் சுகமெல்லாம் துன்பத்தில் முடிகின்றதென்பதை அறியாதவர்களாக இருக்கின்றோம்.

உலக வாழ்வு எது என்றும் எப்படி வாழ்ந்தால் இன்பம் நிலைத்து நிற்கும் என்றும் முழுமையாக உணர்ந்து விட்டால் துன்பம் நம்மை வந்தடைவதில்லை. உலகத்தின் மீது மிகப்பற்று வைத்து நாம் நீண்ட நாட்கள் வாழப் போகின்றோம், இவைகள் எல்லாம் நம்முடையது என்ற மமதையில் உழல்கின்றார்க்குத் துன்பம் மிக அருகிலேயே இருக்கும்.

இவ்வுலக வாழ்வில் இனியும் அல்லல்பட முடியாது என்று தெளிவாக உள்ளத்தைத் தயார்நிலைப் படுத்திக் கொண்டு அன்பையும் அருளையும் உள்ளத்தின் முழு நிலையாக்கிக் கொள்பவன் துணிந்தவன். துணிந்தவனுக்கு எப்போதுமே துன்பம் இல்லை. இதைத்தான் 'இன்னம் அல்லல் படமுடியாது' என்று தாயுமானவர் கூறுகிறார்.

திறந்த வெட்ட வெளியிலேயே படுகின்ற சூரிய ஒளியானது இருளிலேயே வாழ்ந்து பழகியவனுக்கு இன்பம் தராது. இருட்டறையிலேயே இருந்து பழக்கப்பட்ட அவன் அதைவிட்டு விடச் சம்மதிக்க மாட்டான்.

அந்த மனிதன் போன்று நாமும் பழைய அடிமை வாழ்வை விட்டு விலகிச் சுதந்திரமான புதிய வாழ்விற்கு வர விரும்புவதில்லை. முன்னோர்கள் என்ன செய்தார்களோ அதை அப்படியே செய்ய வேண்டும் என்று கருதுகிறோம். கேட்டால் அது எங்கள் சம்பிரதாயம் என்றும் எங்கள் முன்னோர்கள் இப்படித்தான் செய்தார்கள் எனவே நாங்களும் அப்படித்தான் செய்வோம் என்று சாதிப்பார்கள்.

காலத்தால் சில மாறி விடுகிறது. அப்போது மட்டும் தானாக இவர்களும் மாறி விடுகிறார்கள். உதாரணத் திற்கு ஒன்று. சவ ஊர்வலம் இப்படித்தான் இந்த இந்த பாதையில்தான் செல்ல வேண்டும் என்பார்கள். நீண்ட தூரம் ஏன் செல்ல வேண்டும் ? இந்தப் பாதை வழியாகச் சென்றால் விரைவில் சென்றடையலாம் என்றால் மொத்த மாக அது கூடாது— முன்னோர்கள் இப்படித்தான் சென்றார்கள் என்று எதிர்த்துப் பேசி காலம்கடந்தாலும், கால்கள் வலியெடுத்தாலும் அந்த வழியேத் தான் சென்று வருவார்கள். காலத்தால் அந்தப் பாதைகள் மாற்றப் பட்டு பழைய பாதைகளே இல்லாமற் போயிற்று என வைத்துக் கொள்வோம். அப்போது குறுக்குப் பாதை வழியாகச் செல்லத் தயங்க மாட்டார்கள். சம்பிரதாயம் அப்போது குறுக்கே நிற்பதில்லை. காலத்தோடு மட்டும் மாறுவதில்லை, தேவைப்படும் போது மட்டும் மாறுவது பகுத்தறிவு இல்லை. எப்போதும் எதிலும் முன்னேற்றம் காணத் துணிவாகத் தன்னை மாற்றிக் கொண்டு வாழ முற்படுவதிலே தான் உள்ளது முன்னேற்றம்.

பெரும்பாலும் மூட பழக்கங்கள் நம்மைவிட்டு நீங்கி விடவேண்டும் அன்பு உள்ளமாக இருக்கலாம், அருள் உள்ளமாக இருக்கலாம். ஆனால் அடிமையுள்ளமாக மட்டும் இருக்கக் கூடாது.

நாம் வாழ்வது ஒரு குளம் என்று எண்ணிக் கொள் வோம். அந்தக் குளத்தில் வாழுகின்ற தவளைகளுக்கெல் லாம், அந்தக் குளத்தில் மலர்ந்திருக்கும் அழகான தாமரை மலர்களும், அதன் நறுமணமும், அதன் பயனும் புரிவதில்லை. தாமரையின் மிக அருகே சென்று வரும் தவளைக்கும் அது தெரிவதில்லை. தெரிந்து கொள்ளும் ஆற்றலும் அதற்கு இல்லை. ஆனால் எங்கோ இருந்து வண்டினங்கள் நேராக வந்து தாமரையின் தேனை உறிஞ்சி மகிழ்கிறது! நமது நாட்டின் சிறப்பெல்லாம் கூட

பிற நாட்டினர் புரிந்து தெரிந்து பயன் அடைகின்றனர் என்றால் இப்படித்தான். எனவே தவளையாய் வாழ்தல் தவறன்றோ?

ஏதாவது ஒரு பொறுப்பான வேலையைச் செய்யச் சொல்லும் பொழுது இவ்வுலகில் ஒவ்வொருவரும் அதை ஏதாவது ஒரு காரணம் கூறி தட்டிக் கழிக்கப் பார்க்கின்றனர். அற்புதமாகக் கண்டுபிடிக்கப் பட்டதை, புத்தி சாலித்தனமாக உருவாக்கப்பட்டதை ஏதாவது ஒரு சாக்குப் போக்குச் சொல்லி தடுக்கப் படுகிறது. எவ்வளவு தான் புத்திசாலித்தனமாக அவன் வாழ்ந்தாலும் சூழ்நிலை அவனை குற்றவாளியாக்கி விடும். உண்மையான குற்றவாளிகளின் நிலை மணலுக்குள் தலையை விட்டுக் கொண்டு தன்னை யாருமே இனிமேல் பார்க்க முடியாது என்று எண்ணிக் கொண்டிருக்கும் நெருப்புக் கோழியின் நிலையைப் போன்றது.

இந்த உலகம் விசித்திரமானது, மனிதனுடைய தனிப் பட்ட உள்ளமும் விசித்திரமானதே! நெருங்கிய நண்பர் களிடையே கூட அவ்வப்போது சிறுசிறு வேற்றுமையும், மனக் கசப்பும் ஏற்படுவதுண்டு.

சிறிய அளவில் ஏற்படும் மன எரிச்சல் குமுறி வெடிக்கக் கூடிய கோபம் அல்லது ஆவேசமாக மாறு கிறது. அதுவே பின் சினமாக மாறுகிறது ஆகவே எரிச்சலை முளையிலேயே கிள்ளி விடவேண்டும். மனத் தடாகத்தில் எரிச்சல் தோன்றும் பொழுது விழிப்புடனும் எச்சரிக்கையுடனும் இருக்க வேண்டும். அதை பெரிய கோப அலையாக உருவாவதற்கு விடுதல் கூடாது.

பாத்திரத்தில் உள்ள பால் அடுப்பின் மீது வைத்து அது சூடேறும்போது மேல் பரப்பில் இலேசான ஆவி தோன்றும். சிறுசிறு குமிழிகளும் தோன்ற ஆரம்பிக்கும். அதன் பிறகு அது கொதிக்க ஆரம்பிக்கிறது. அடியி

லிருந்து மேல் பாகத்திற்கும் மேல் பரப்பு அடி பாகத் திற்கும் செல்லுகின்றது. இப்போது பால் முழுதும் கொந்தளிப்பு ஏற்படுகிறது. பிறகு நுரை கட்டுகிறது. பிறகு பொங்குகிறது மேலும் அடுப்பில் நெருப்பு எரிந்து கொண்டே இருந்தால் பால் முழுவதும் பாத்திரத்திற்கு மேல் பொங்கி நெருப்பில் வழிந்து விடும். அதே போல் ஆரம்பத்தில் மனத்தளவில் வெறுப்பு, பொறாமை அல்லது சினம் சம்பந்தப்பட்ட இலேசான எண்ணம் தோன்றுகிறது.

இது ஒரு மிகச் சிறிய அலை போன்றது. இது அவ் வளவாகத் தெளிவாகத் தெரியாது. வெறுப்பு அல்லது சினம் சம்பந்தப்பட்ட ஒரு எண்ணம், அதே போன்று மற்றொரு எண்ணத்தோடு சேர்கிறது. வேறு சில எண்ணங்களும் அதன் நிலைகளும் ஒன்று சேர்ந்து கொள்கின்றன. இப்பொழுது மூளை கொதிக்கிறது. உடலும் கொதிப்படைகிறது. எண்ணக் குமிழிகள் ஏற்படுகின்றது. இத் தீய எண்ணங்களுக்கு மனிதன் இரையாகின்றான். இப்போது அவனிடத்தில் கட்டுப் பாடு என்பது இருக்காது. அவன் எதை வேண்டு மானாலும் செய்வான். அவன் எப்பேர்ப்பட்ட அற்பத் தனமான கொடூர குற்றத்தையும் புரியக்கூடும். எண்ணங் களைக் கவனித்து அவற்றை முளையிலேயே நசுக்கி விடுங்கள். பகுத்துப் பாருங்கள். நீங்கள் செல்லுகின்ற பாதை சரியற்றதாகப் படும். சரியற்ற பாதையென்று தெரிந்தும் அதில் பயணம் செல்வானேன் ?

# 4. உள அமைதியே நலம் தரும்

ஒரு பொருளின் புற அமைப்பும், அக அமைப்பும் அப்பொருளை விளக்குகின்றன. புற அமைப்பை அறிவதோ, அதை அணுகுவதோ சுலபமானது. அக அமைப்பை அறிவதும் கடினம், அதை அணுகுவதும் மிகக் கடினம். சமயத்தின் அக அமைப்பை அறிவதும் பின் பற்றுவதும் சாதாரண செயலன்று அதன் புற அமைப் பாகிய சடங்குகளைச் செய்வது சுலபம். சின்னங்கள் அணிவது, கோயிலுக்குச் செல்வது, கோயில் கட்டுவது, மத நூல்களைப் படிப்பது, மத போதனைகளைக் கேட்பது, சடங்குகளைச் செய்வது ஆகிய செயல்களை மதத்தின் பெயரால் செய்வது சுலபம். ஆனால் மதம் புகட்டும் முறையான அக அமைப்பானது சித்தி சுத்தி அடைந்து மனிதனை முழு மனிதனாக நிலைத்து நிற்பதே யாகும். மனத்தை உள் முகமாகத் திருப்பிப் பேருணர்வு மயமாக இருப்பதன் மூலம் உள்ளத்தில் அதை லயித் திருக்கச் செய்வது செயற்கரிய செயலாகும்.

ஒரு சிலர் இறைவன் சொர்க்கத்தில் இருக்கிறார் என்று கூறுகின்றனர். இன்னும் சிலர் இறைவன் இயற்கை முழுவதும் நீக்கமற நிறைந்திருக்கின்றார் என்று கூறுகின்றனர். இவ்விரண்டு கோட்பாடுகளின் முடிந்த நிலை ஒன்றுதான். அவரவர்களுக்கு விருப்ப மான மார்க்கத்தைப் பின்பற்றி இறைவனை அறியலாம்.

ஆரம்பத்தில் அவர்கள் பின்பற்றும் மார்க்கங்கள் வெவ்வேறானவைகளாகத் தென்படும் முடிவில் இரண்டும் ஒரே குறிக்கோளின்கண் கொண்டு சேர்ப்பதை அறியலாம்.

ஒவ்வொரு மதமும் தியாகத்தையும் சுயநலமின்மை யையும் வலியுறுத்துகின்றன. உண்மை எது என்பதை நாம் அறிய விரும்புகின்றோம். நாம் அதை அறிந்தே ஆக வேண்டும் அறிந்தோ அறியாமலோ நாம் அதற்காக முயல்கின்றோம். அவ்வுண்மையைக் காண்பதற்கு எது தடையாக இருக்கின்றது? உண்மையை அறிவதற்கு நமக்கு நாமே தடையாக இருக்கின்றோம். நமது முன் னோர்கள் உண்மையை அறிவதற்குத் தடை செய்வதைச் சாத்தான் என்றும் மாயை என்றும் கூறுவார்கள், ஆனால் மாசு உடைய மனமும் அதற்குக் காரணம் என்பதை உணர்ந்தார்களில்லை.

மனம் என்றும் தெளிவாய் இருத்தல் வேண்டும். அமைதியாய் இருப்பது ஒரு வலிமையான ஆயுதம். எந்த இக்கட்டான சூழ்நிலையிலும் இருந்து விலகி வெளியே வர அது உதவுகிறது. அவமதிப்புகள் ஏற்பட்டாலும் அதைப் பொருட்படுத்தக்கூடாது. யார் வேண்டு மானாலும் அவர்களுக்குப் பிடித்ததைப் பேசிக்கொண்டு போகட்டும். சொல்வதை சொல்லட்டும். எல்லோரிடம், எல்லா நிலையிலும் பணிவோடு இருக்கப் பழக வேண்டும். 'உயர்வு தாழ்வு மனப்பான்மையைக் கை விடுதல்' இது அனைவராலும் முயன்றால் முடியக் கூடியதே. எல்லா இடத்திலும் எல்லாரிடமும் இறைவனைக் காணக் கற்றுக் கொண்டால் இது நம்மால் இயலும்.

நமக்குச் சிலவற்றில் விருப்பும் சிலவற்றில் வெறுப்பும் தோன்றுகிறது. நாம் நமக்கு விருப்பமானவற்றை வேண்டி அடைகிறோம். வெறுப்பனவற்றை ஒதுக்கித்

தள்ளுகிறோம். இரண்டிலும் வெற்றியையும் தோல்வி யையும் அடைகிறோம். இதனால் உள்ளம் இன்பமும் துன்பமும் அடைய வாழ்க்கையையே இன்பமாகவும், துன்பமாகவும் மாறி மாறி அனுபவிக்கிறோம்.

நன்மை எய்தினால் உள மலர்ச்சியும், தீமை அடைந் தால் மனச் சோர்வும், துக்கமும் எய்துகிறோம். வெற்றி, தோல்வி, இன்பம், துன்பம் யாவற்றிலும் இவ்வண்ணமே நம் உள்ளம் பலப்பட ஊசலாடுகிறது.

நல்வினை, தீவினை என்பனவே நாம் செய்யும் இருவகைச் செயல்கள். இவைகளின் பயன்களே நாம் இங்கே அனுபவிப்பன யாவும் நல்வினைப் பயனில் விருப்பம் கொள்கிறோம். இந்த நிலை அடையாமல் நல்வினை தீவினை எனும் இரு வினைகளையும் ஒன்றாகக் கருதும் நிலை அடைவதே இருவினை ஒப்பு என்பதாகும்.

வினை செய்யாமல் நாம் வாழ்தல் முடியாது. ஆனால் தீவினை செய்யாமல் வாழலாம். தீயனவற்றை விலக்கி அதிலும் அதனை வெறுப்பில்லாமல் விலக்கி விடுதல் வேண்டும். நல்லனவற்றையே செய்தல் வேண்டும். அதுவும் அதில் பற்றின்றிச் செய்தல் வேண்டும்.

நான் நன்மை செய்கிறேன் எனும் முனைப்பின்றி எல்லாம் நலமேயாக வேண்டும் என்னும் நினைவோடு செய்தல் வேண்டும். அதே நேரத்தில் அதன் பயனையும் எதிர்பாராமல் செய்தல் வேண்டும். இப்படிப்பட்ட நிலை நாம் அடைய வேண்டுமானால் எல்லாவற்றையும் ஏற்றக் குறைவற்ற சமநிலையில் பார்க்கும் ஞானம் அடைதல் வேண்டும்.

இது உயர்ந்தது, இது தாழ்ந்தது என்று பிரித்துப் பார்த்து உயர்ந்த பொருள்களையும்— அவைகளை உபயோகிக்கின்றவர்களே உயர்ந்தவர்கள் என்றும் எண்ணி விடுவது கூடாது. எளிமையாக வாழ்ந்து

எத்தனையோ ஞானிகள் தன் உயர்ந்த ஒப்புயர்வற்ற ஞானத்தை இவ்வுலகம் அறிய வாழ்ந்து காட்டியுள்ளனர்.

**"ஓடும் இருநிதியும் ஒன்றாகக் கண்டவர்கள்**
**நாடும் பொருளான நட்பே பராபரமே"**

ஒன்றில் விருப்பும், ஒன்றில் வெறுப்பும் இன்றி புண்ணிய பாவம் இரண்டினும் அவற்றின் பயன்களிலும் ஒப்ப உயர்வு நிகழ்ந்து விடுவதையே இருவினை ஒப்பு என்கிறார்.

இந்த இருவினை ஒப்பு எனும் திட்டம் எந்த அளவு நமக்கு வாய்க்கப் பெறுகிறதோ, அந்த அளவுக்கு நம்மிடம் பொருந்தியுள்ள தீய சக்தி மெல்ல மெல்ல குறைந்து விடும்.

அமைதி அன்பை வளர்க்கும், அறிவை வளர்க்கும். அமைதியாக சிந்திப்பதால் அது ஆற்றலையும் வளர்த்து விடும். எனவே எங்கும் எப்போதும் எதற்காகவோ அலைவதும், பேசிக் கொண்டேயிருப்பதும் தவிர்த்து அமைதியாக ஓர் இடத்தில் அமர்ந்து சிந்தனை செய் வதும்— தனது சினத்தை ஆற்றிக் கொள்வதும், கடமை களை சிந்திப்பதும்— சிந்தனையில் வந்ததை செயலாற்றி முடிப்பதும் சிறந்த வழியாகும்.

# 5. சமயமும் தத்துவமும்

சமயம் என்பது ஒரு குறிப்பிட்ட வழிபடு தெய்வத்தைப் பற்றியும், அதனைத் தொழவேண்டிய முறை பற்றியும், தொழுவார் செய்யத் தக்கன, செய்யத் தகாதன, தொழுதால் பெறுவன முதலியன பற்றியும் கூறுவது. தத்துவம் என்பது சமயத்தில் ஓர் உட்பிரிவு. குறிப்பிட்ட சமயத்தில் குறிக்கப்படும் இறைவனுக்கும், அவனால் படைக்கப்பட்ட உயிரினத்திற்கும் இடைத் தொடர்பு— ஒற்றுமை வேற்றுமை இரண்டையும் இணைக்க முயலும் கருத்துக்கள் இரண்டின இயல்புகள் முதலியன பற்றிய விரிவான ஆனால் நுட்பமான ஆராய்ச்சியே யாகும். எனவே தத்துவம் இன்றிச் சமயமில்லை ; சமயமின்றித் தத்துவமில்லை. இவ்விரண்டிற்கும் உள்ள வேறுபாட்டைத் தெளிவாகச் சொல்வதனால் சமயம் என்பது இறைவன் பற்றிய மேற்போக்கான அறிவு

சமயம் என்பது பாதை, தத்துவம் என்பது அப்பாதையில் செல்லும் பயணத்தில் கிடைக்கும் அனுபவங்கள். ஒவ்வொரு பாதையிலும் ஒவ்வொருவித அனுபவம் கிட்டுவது போல் ஒவ்வொரு சமயத்திற்கும் ஒவ்வொரு தத்துவம் உண்டு. சமயங்கள் வேறாதல் போல, தத்துவங்களும் வேறாகின்றன. ஆனால் அச்சமயமும்— தத்துவமும் உணர்த்தும் முடிவு இறைவன் என்னும் ஒன்றே என்பதைக் கருத்தில் கொள்ளுதல் வேண்டும்.

சமயம் என்பது இறைக் கொள்கை என்று குறிப்பது பொருந்தும். எல்லாச் சமயங்களும் தோற்றத்தில் வேறு பட்டன போல் காணப்படினும் அவையனைத்தும் இறை ஒன்றையே மூலப் பொருளாகக் கொண்டு இருத்தலாலும், இறையை அணுகுவதற்கு அன்பே அடிப்படை என்ற கொள்கையை கொண்டிருப்பதால் அவை ஒன்றேயாகும்.

இந்து சமயம், கிறித்துவ சமயம், இஸ்லாமிய சமயம், பௌத்த சமயம், சீக்கிய சமயம் முதலான எல்லா சமயங்களும் குறிப்பிடும் மிக முக்கியமானது அன்பே இறைவன்.

வழிபடு பொருளிலும், வழிபாட்டு முறையிலும் வேற்றுமை இருப்பினும் உயிர் இரக்கம் எல்லாச் சமயங் களையும் இணைக்கும் அடிப்படையாக அன்பைக் குறிக்க லாம்.

தமிழக வரலாற்றில் இடைக் காலத்தில் சைவ, வைணவ, பௌத்த சமயங்களுக்குள் பெரும் பகையும் பூசலும் இருந்தன என்பதைக் காணுகின்றோம். இருப் பினும் இவையனைத்தும் அன்பை, கருணையைப் பெரிதும் போற்றியதையும் காண்கிறோம்.

சித்தர்கள் அனைவரும் சமயங்களையும், அவற்றைத் தோற்றுவிப்பதற்குக் காரணமான உருவ வழிபாட்டையும் அதனோடு பிணைந்த சாத்திர சடங்குகளையும் சாடிய வர்கள். எக்காலத்தும், எக்காரணத்தாலும் எவ்விதக் கருத்து வேறுபாடும் எழுதற்கியலாத அன்புக் கொள் கையை வற்புறுத்தியவர்கள்.

திருமூலர் சித்தர் மரபின் முன்னோடியாய் விளங்கிய வர். எனவே இவரது சமயம்— இறைக் கொள்கை— அன்பே— என்பது தெளிவு. இவ்வன்பையே சமயமாகக் கொண்ட நிலை திருமூலர் புதிதாகக் கண்டதன்று, அவருக்கும் முன்னால் பரவி இருந்த இக் கொள்கைக்கு புத்துயிரும் புது வடிவமும் தந்தார் எனலாம்.

இறைவன் அன்பு வடிவானவன். அவனை அடைய அன்பு வழியில் நடத்தல் வேண்டும்; அன்பு உருவில் இருத்தல் வேண்டும் என்பதே திருமூலரின் சமயமாகும்.

திருமூலரின் திருமந்திரத்தை நன்றாகப் பயின்றுவரின் அதில் அடிக்கடி வரும் சொற்களில் அன்பு, அருள், கருணை முதலியனவையே மேலோங்கி நிற்கின்றன என்னும் உண்மை புலனாகும். உலக இயக்கம் அனைத்திற்கும் இவையே காரணமாகின்றன. ஆதலின், இதனினும் வேறு தெய்வம் இல்லை என்று அறியலாம்.

உருவ வழிபாடு பொருளால் கருத்து வேறுபாடு எழுதற்கு வாய்ப்பு உண்டு அனைத்தும் கடந்து அருவுரு வற்ற நிர்க்குணனான இறை அன்பு வடிவானவன் என உணர்ந்து அனைத்து உயிர் மாட்டும் அன்பு செலுத்துவதே இறைவனுக்குச் செய்யும் பூசனை எனக் கருதலாம் என்பது திருமூலரின் சமயக் கொள்கை.

**"அன்போ டுருகி அகங்குழை வார்க்கன்றி**
**என்போல் மணியினை எய்தவொன் னாதே"**

**"அன்பினுள் ளாகி அமரும் அரும்பொருள்**
**அன்பினுள் ளார்க்கே அணைதுணை யாமே"**

அன்பைப் பற்றி திருமூலர் இவ்விரண்டு பாடல்களில் அன்பு இதயத்தில் இல்லார்க்கு இறைமை கிடைப்பதரிது என்பதும், அன்பு வடிவமான இறைவனை அன்புள்ளாரே அடைதல் கூடும் என்பதும் முறையே காட்டிய பாடற் பொருளாகக் கொள்ளலாம்.

அன்பு என்பது உயிர்கள் மாட்டுச் செலுத்தும் ஒருவித உணர்வு. இதன் விளைவே அருள் என்பது.

அன்பு என்பது அறிந்தார் மாட்டுச் செலுத்துவது, அருள் என்பது அனைவரிடத்திலும், அனைத்து

உயிர்களிடத்தும் செலுத்துவது. கருணையென்பதும் அதுவே யாகும்.

"நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்" எனத் திருமூலர் கூறுவது இவ்வருளின் பாற்படும் தன்னுடல் மேலும் தன்னுயிர் மேலும், ஒருவனுக்கு அன்பு தோன்றுவதும் இயல்பே. உலகில் உள்ள அனைத்து உயிர்களையும் தம்முடையதாகக் கருதும்போது அனைத்தின் மாட்டும் எழுவது அருளேயாகும் இதையே இராமலிங்க அடிகள் தம்முடைய சுத்த சன்மார்க்க சமயத்தின் தத்துவமாகக் கொண்டார் சீவகாருண்ய ஒழுக்கம் என்பது அவர் இதற்கு வைத்த பெயர்.

தொட்டால் அறியும் ஓர் அறிவுடைய புல், மரம், செடி முதலியனவும்; அத்தோடு நாவில் அறியும் இரண்டறிவுடைய நத்தை, சங்கு, கிளிஞ்சல் முதலியனவும்; இவற்றோடு முகர்தல் அறிவும் சேர்ந்து மூன்று அறிவுடைய கரையான், எறும்பு, ஈசல் முதலியனவும்; இவற்றோடு காட்சி தரும் அறிவும் சேர்ந்து நான்கறிவுடைய நண்டு, வண்டு, தும்பி முதலியனவும் ; இவற்றோடு கேள்வி அறிவும் சேர்ந்து ஐந்தறிவினையுடைய விலங்கு, பறவை முதலியனவும் ; இவற்றோடு பகுத்தறிவு பெற்று ஆறறிவுடைய மக்கள் வரை உள்ள அனைத்து உயிர்களும் ஜீவன் என்னும் சொல்லுள் அடங்கும்.

மேற்காட்டிய அனைத்து உயிர் மாட்டும் எவ்விதப் பலனோ அச்சமோ இன்றிக் காட்டும் விழுமிய அன்பே கருணை அல்லது ஜீவகாருண்யம் என்பது.

உண்மையில் ஜீவனின் இயல்பான தன்மையே கருணைதான். எனவே இறைவன் அனைத்து உயிராயும் இலங்குகின்றான் என்பதே சமயங் கடந்த உண்மை.

சமயங்கள் எதுவானாலும், மதங்கள் எதுவானாலும் அதில் பிரிவுகள் எதுவானாலும், அவைகளின் தத்துவங் கள் எல்லாமே ஒரே கொள்கையுடையதுதான். சமநீதி, சமத்துவம், சமரசம் என்பவைகளே. இன்றைக்குத் தேவையும் அதுவேயாகும்.

கீழே குறிப்பிட்டுள்ள சில மதங்களின் ஒற்றுமையை கூர்ந்து நோக்கின் புரியும்.

*1.* **Hinduism— Rig Veda** ***10—196***

இந்து சமயம் (ருக் வேதம்)

**ஸமானோ மணஹ ஸமிதி ஸமானி |**
**ஸமானம் மணஹ ஸஹ சித்தம் ஏஷாம் ||**
**ஓம் சாந்தி சாந்தி சாந்தி**

Common be our prayer
Common be our end
Common be our purpose
Common be our deliberation
Om peacc ; peace ; peace.

உங்களது இலட்சியம் ஒரே மாதிரி அமையட்டும்.
உங்களது சந்திப்புப் பொதுத் தன்மை பெறட்டும்.
உங்களது மனம் ஒரே மாதிரி விளங்கட்டும்.
மனங்களின் சிந்தனைகள் இணைந்து திகழட்டும்.
ஓம் அமைதி ; அமைதி ; அமைதி.

ப்ருஹதாருண்யகோ உபநிஷதம் :

From unreal lead me to the real
From Darkness lead me to light
From death lead me to immortality
Om peace ; peace ; peace.

பொய்மையிலிருந்து மெய்மைக்கு வழிகாட்டு.

2. க்ரீக் மொழியில் உள்ள கிறித்துவப் பிரார்த்தனை:

**Holy God. Holy and strong, Holy and immortal have mercy on us.**

பரிசுத்த தெய்வமே! பரிசுத்தமும் உறுதியுமானவரே! பரிசுத்தமும் அழிவுமற்றவரே; எங்கள் மீது கருணை காட்டும்! ஆமென்.

3. அராபிய மொழியில் உள்ள குரான்— இஸ்லாமியப் பிரார்த்தனை:

**The most merciful**
**Praise belongs to God**
**The Cherisher and sustainer of creation.**

கருணையுடைய கடவுளே! படைப்பவனாகிப் பேணிப் பாதுகாத்துக் கருணையுடையவனாய் விளங்குகின்ற கடவுளாகிய உனக்கே எல்லா மகிழ்ச்சியும் சொந்தம்.

4. ஆப்பிரிக்கப் பரம்பரை ஜிம்பாவின் சமயம்:
**Wonderful one; you live in the midst of the sheltering rocks; we pray to you, hear us Lord!**
ஆச்சரியப் படத்தக்க ஒன்றே; பாதுகாப்புத் தருகின்ற— நிழல் தருகின்ற பாறைகளுக்கு இடையிலும் நீ இருக்கிறாய். நாங்கள் உன்னிடம் பிரார்த்தனை செய்கின்றோம்— இறைவனே! நீ அதனைக் கேட்பாயாக!

5. இரானியன் மொழியில் உள்ள ஜொராஸ்ட்ரானியன் பிரார்த்தனை: (Zorastrianism)

**Perfect eternal life we gain**
**Our souls grown strong**
**Our lives renewed.**

களங்கமில்லாத முடிவற்ற வாழ்க்கையைப் பெறுகிறோம். நமது ஆன்மாக்கள், பலமுள்ளதாக வளரட்டும். நமது வாழ்க்கை புதுப்பிக்கப்படட்டும்.

6. ஹீப்ரு மொழியில் உள்ள ஜீடாயிசம் :

Make us Joyful with Thy
Salvation, and cleans hearts to serve the truly.

உன்னுடைய கருணையினால் எங்கட்கு மகிழ்ச்சியை உண்டாக்கு ; சுத்தமான எங்களுடைய இதயத்தினாலே உண்மையாக உனக்குச் சேவை செய்ய— ஆமென்.

7. பாலி மொழியில் உள்ள புத்த சமயம் :

Has god Control of the senses :
Is moderate of the senses.
Is moderate in eating full of faith and high high vitality.

கட்டுப்படுத்தப்பட்ட புலனடக்கம், மிதமான உணவு, முழு நம்பிக்கை, ஜீவ சஞ்சாரம்.

8. சீன மொழியில் உள்ள தோயிஸம் :

The great Joa is universal
Like a flood ; How can it be turned.
To the right or to the left ?
All creatures depend on it.

அகில உலக சராசரம் அனைத்தையும் மிகப் பெரிய சீனத்து தாவோ மதம் வெள்ளம் போல் ஒன்றாக இணைக்கிறது. எப்படி வலப்புறம் ; இடப்புறம் திரும்ப முடியும் ? எல்லா உற்பத்திகளும் அதற்குள் அடக்கம்.

மேலே குறிப்பிட்ட எட்டு மதங்களின் பிரார்த்தனை களும் ஏறக்குறைய ஒரே மாதிரியாகவே இருக்கும் பொதுவாக பொது நோக்கமும் உயர்ந்த கொள்கையும் சமநோக்கும் இருக்கும். இப்படி அனைத்து மதங்களும் ஒன்றையே குறிக்கும் போது அனைத்து மக்களுமே ஒன்று என்பதை ஏனோ மறந்து விடுகின்றன. இதுவே புரியாத புதிராக இருக்கிறது.

மதங்களில் எது சிறந்தது, எது தாழ்ந்தது என்பது இல்லை. சில மதங்கள் உருவ வழிபாடு தேவையில்லை என்பதை வலியுறுத்துகின்றன. ஆனால் மூடப் பழக்க வழக்கங்கள் என்பதை எடுத்துக் கொண்டால் அனைத்தி லேயும் இருக்கிறது. ஆனால் அதிகம், குறைவு என்று வேண்டுமானால் இருக்கும். எந்த யெந்தப் பகுதி மக்களுக்கு எது யெது பிடிக்கிறதோ அந்த அந்த மக்கள் அவைகளைப் பின்பற்றி வருகின்றனர். ஆனால் அன்பு ஒன்றே இறைவனை இதயத்திலிருத்தப் பயன்படும்.

**அனைத்துயிர் ஒன்று என்றெண்ணி**
**அரும்பசி எவர்க்கும் ஆற்றி**
**மனதினில் வஞ்சனை, சூது, களவு**
**சினத்தையும் தவிர்த்து விட்டால்**
**இந்த உலகமே அன்பிலே அடங்குமே**
**பந்த பாசங்கொண்டு, எல்லோரையும்**
**ஒன்றாக எண்ணுவோம்; அனைவருமே**
**உயர்வினைப் பெறுவோம்.**

எல்லா சமயங்களும் அறமாகிய ஒரே நீதியைத்தான் போதிக்கின்றன. மனிதன், மனித குணத்தை உணரா விட்டால் அதற்கு மதம் என்ன செய்யும்?

எந்த மதமும் 'குத்து, வெட்டு, சண்டையிட்டுக் கொள்' என்று போதிக்கவில்லை என்பதை உணர்ந்து புத்திக்

கூர்மையுள்ள எல்லா சமயத்தவரும் மனித நேயத்தை வளர்த்துக் கொண்டால் அங்கே ஆன்ம நேயம், அன்பு உள்ளங்களுமாக மாறும்.

உலகத்தின் எந்த இடத்தில் வாழும் மக்களாக இருப்பினும், எந்தச் சூழ்நிலையில் சிக்கித் தவிக்கும் நிலையிருப்பினும், எந்த மொழி பேசும் மக்களாக இருப்பினும், எந்த அரசின் கீழ் உள்ள பாகமாக இருப்பினும் அறத்தையும் அன்பையும் மறந்து மனமாச்சரியங்களுக்கு இடமளித்து, உயர்வு தாழ்வு என்ற பேதத்தை வளர்த்துக் கொள்வார்களாயின் அங்கே நேர்மையும் நீதியும் இருக்காது.

நேர்மையும் நீதியும் இல்லாத இடத்தில், உண்மையும் உள்ள அமைதியும் கெடும். அமைதி கெடுகின்ற இடத்தில் மன உளைச்சல்கள் ஏற்படும். அமைதியும் கெட்டு மன உளைச்சல்களும் ஏற்பட்ட பின் அங்கே உண்மை, நேர்மை, நீதி நிச்சயம் இருக்க இயலாது.

எனவே உலகில் உள்ள எல்லாச் சமயங்களும் போதிக்கும் தத்துவம் ஒன்றே என்பதை உணர்ந்து கொள்வோம்.

சமயம், என்பது ஒரு குறிப்பிட்ட இறையைக் குறிப்பிட்ட வடிவத்தில் குறிப்பிட்ட முறையில் வழிபடச் சொல்லும் குறிப்பிட்ட இறைக் கொள்கையாகும். சமயம் என்பது பாதையானால், தத்துவம் என்பது பயணம் போன்றது. சமயங்கள் வேறு படுவது இயல்பு. எனினும் அவை நோக்கும் இறுதி இலக்கு அனைத்துக்கும் இறைவனாகிய ஒருவனே. ஆதலாலும் அனைத்துச் சமயங்களும் அன்பு எனும் ஒன்றின் அடிப்படையிலேயே எழுப்பப்படுகின்றன. ஆதலாலும் அவை அனைத்தும் ஒன்றே. அவற்றில் உயர்வு தாழ்வு இல்லை என்பது மட்டும் உண்மை.

பொதுவாக இயற்கையின் ஆற்றலைக் கண்டு வியந்த மனிதன் அந்த ஆற்றல்தான் இறைவன் என்று எண்ணத் தலைப்பட்ட நாளில் உலகையே ஆட்டிப் படைக்கும் ஓர் சக்தி உண்டு என்பதை மட்டும் உணர்ந்தான்.

சக்தி என்ற சொல்லுக்கு ஆற்றல் என்பது பொருள். இவ்வுலகில் அனைத்து உயிர்களின் இயக்கத்திற்கும் ஏதேனும் ஒருவகை ஆற்றல் தேவைப்படுகிறது. ஆற்ற லின்றி எவ்வித அசைவும் ஏற்படுவதில்லை. எனவே பண்டைய மக்கள் இயக்கத்திற்கு அடிப்படையான ஆற்றலை— சக்தியைத் தாயாக வழிபடத் தொடங்கினர். இவ்விரண்டுக்கும் சுருங்கச் சொன்னால் பொருளைச் சிவமாகவும், ஆற்றலைச் சக்தியாகவும் போற்றத் தலைப் பட்டனர். இவ்விரண்டும் இணைந்தேயிருக்கும். பொரு ளின்றி ஆற்றல் இல்லை; ஆற்றல் இன்றிப் பொருள் சிறப்புறாது.

"பேரறிவே பிரம்மம்" (ப்ரஞ்ஞானம் பிரம்மம்) என்று ருக் வேதமும்; "நான் அறிவு நிலையாக இருக் கிறேன்'' (அகம் பிரமாஸ்மி) என்று யஜுர் வேதமும்; "நீ அறிவு நிலையாக இருக்கிறாய்" (தத்தவமணி) என்று சாம வேதமும்; "ஆத்மா அறிவு நிலை" (அயமாத்மா பிரம்மம்) என்று அதர்வன வேதமும் நமக்கு தெளிவு படுத்தியுள்ளது.

பிரம்ம நிலையான மனிதன் உண்மைப் பேரறிவாகிய ஞானத்தின் துணைக் கொண்டு தெய்வீக குணங்களோடு வாழவேண்டும். தெய்வீக குணங்கள் யாவை? அசுர குணங்கள் யாவை? என்பது பற்றி பகவத் கீதையின் பதினாறாம் அத்தியாயமான "தேவா அசுரா சம்பத் விபாக யோகம்" என்ற பகுதியில் மிகத் தெளிவாகக் கூறப் பட்டுள்ளது. அவைகள் பின் வருமாறு :—

1. அஞ்ஞாமை, உள்ளத் தூய்மை, ஞானத்திலும் யோகத்திலும் செயல் உறுதி, தானம், தன்ன டக்கம், ஆன்மீக ஆராய்ச்சி, தவம், நேர்மை.

2. அகிம்சை, சத்தியம், கோபத்தை அடக்குதல், தியாக உணர்ச்சி, சாந்தம், கோள் சொல்லாமை, எல்லா உயிர்களிடத்தும் இரக்கம், பேராசை, யின்மை, மரியாதை, அடக்கம், அற்பச் செயல்களில் ஈடுபடாமல் இருத்தல்.

3. விறுவிறுப்பு, மன்னிக்கும் குணம், தளராத உறுதி, தூய்மை, இறுமாப்பிலிருந்து விடுதலை ஆகியவை களே தெய்வீக குணங்களாகும்.

4. இறுமாப்பு, தற்புகழ்ச்சி, கோபம், முரட்டுத்தனம் ஆகியவைகளே அசுர குணங்கள்.

5. தெய்வ இயல்பு குணங்கள் மேல் நிலையைக் கொடுக் கிறது. அசுர இயல்பு குணங்கள் அடிமைத் தளத்தில் ஆழ்த்துகிறது.

6. இந்த உலகத்தில் உருவாக்கப்பட்டுள்ள உயிர்களுள் தெய்வீக இயல்பும், அசுர இயல்பும் கொண்ட இருவகைகள் இருக்கின்றன.

7. அசுர இயல்புள்ள மனிதர்கள் தாங்கள் எதைச் செய்யலாம், எதைச் செய்யக் கூடாது என்பதை அறிய மாட்டார்கள். அவர்களிடம் தூய்மையோ, நல்லொழுக்கமோ, சத்தியமோ இருப்பதில்லை.

8. இந்த உலகம் பொய்யானது, ஆதாரமற்றது, இறைவன் இல்லாதது. காமம் ஒன்றினால் மட்டுமே தூண்டப்பட்டு ஆண் பெண் சேர்க்கை யால் மட்டும் உண்டானது உலகம் என்று அவர்கள் கூறுகின்றனர்.

9. இவ்வகையிலான கொள்கை கொண்ட சீர்கெட்ட இந்த ஆன்மாக்கள் அற்ப புத்தி உடையவர்கள். இவர்கள் உலகத்தை நாசம் செய்வதற்காக உலகத்தின் விரோதிகளாக வந்து சேருகிறார்கள்.

10. திருப்தி செய்ய முடியாத காம இச்சையில் ஆழ்ந்த இவர்கள் இறுமாப்பு, தற்பெருமை ஆகியவற்றால் தீய நோக்கம் கொண்டு களங்கமுள்ள செயல்களையே செய்பவர்களாக இருக்கிறார்கள்.

11. மரணத்தின் போது மட்டுமே தீரக்கூடிய அளவில்லாத கவலைகளில் ஆழ்ந்து அவர்கள் போகங்களையும், சிற்றின்ப இச்சைகளையுமே வாழ்க்கையில் அனுபவிக்க தக்கது என்று நம்புகிறார்கள்.

12. எண்ணற்ற ஆசை வலைகளில் சிக்கிக் கொண்டு காமத்திற்கும், கோபத்திற்கும் அடிமைகளாகியும் தங்களுடைய ஆசைப் பசியைத் தீர்த்துக் கொள்வதற்காக அநியாயமான வழிகளில் செல்வம் திரட்ட முற்படுவார்கள்.

13. இன்று இதனை நான் அடைந்தேன். இந்த ஆசையைப் பூர்த்தி செய்துக் கொள்வேன். இந்த செல்வம் என்னுடையது, இனிமேலும் பல செல்வங்கள் என்னுடையதாகி விடும்.

14. இந்த விரோதியை நான் முன்பே கொன்று விட்டேன், மற்றவர்களையும் கொல்லப் போகிறேன். நான் எல்லார்க்கும் தலைவன். போகமும் இன்பமும் எனக்கே சொந்தம், எனது செயல்கள் குற்றம் குறையற்றது. பலம் எனக்கு உரியது, மகிழ்ச்சியும் எனக்கே உரியது,

15. நான் செல்வந்தன், உயர்குலத்தில் பிறந்தவன், எனக்கு சமமானவர்கள் எவர் உளர்? நான்

வேள்விகள் செய்பவன். நான் தானங்கள் கொடுப்பேன். நான் மகிழ்ச்சியாக இருப்பேன் என்று அறியாமையாலும் மதி மயக்கத்தினாலும் அவர்கள் இவ்விதமெல்லாம் எண்ணுகின்றனர்.

16. கற்பனையான பலவித ஆசைகளுக்கு இரையாகி, மதிமயக்கமாகிய வலையில் சிக்குண்டு போகங்களில் ஆழ்ந்து அவர்கள் துர்நாற்றம் நிறைந்த நரகத்தில் வீழ்கின்றனர்.

17. தங்களைத் தாங்களே புத்திசாலிகள் என்று தம் பட்டம் அடித்துக் கொண்டு செல்வம், அந்தஸ்து ஆகியவை காரணமாக இறுமாப்பும் பிடிவாதமும் கொண்டு அவர்கள் பெயருக்காகவும் பகட்டுக்காகவும் விதிகளுக்கு முரணாகவும் வேள்விகளைச் செய்வார்கள்.

18. அகங்காரம், பலம், துடுக்கு, காமம், கோபம் முதலிய தீய குணங்களை மேற்கொண்டு அவர்கள் அவர்களுடைய உடலிலும் மற்றவர்களுடைய உடல்களிலும் இருக்கும் பிரம்மத்தை வெறுத்து ஏசுவார்கள்.

19. நிந்திக்கும் கொடிய குணம் உடைய இவர்கள் மனித வர்க்கத்தில் மிக மிகக் கீழ்த்தரமானவர்கள், இழிவானவர்கள். அவர்களை பிரம்மம் அசுர இயல்பு உள்ளவர்களின் கருப்பைகளில் அடிக்கடித் தள்ளுகிறது.

20. அசுர குணமுள்ளவர்களின் கருப்பைகளில் தள்ளப் பட்ட இந்த மூடர்களின் வாழ்வு ஒருநாளும் சிறக்காது. மேலும் மேலும் கீழ்த்தர நிலையையே அடைவார்கள்.

21. மனிதனை நாசமாக்கும் இந்த நரகத்திற்கு காமம், கோபம், பேராசை ஆகிய மூன்று விதமான வாயில்

கள் இருக்கின்றன. இந்த மூன்றையும் தவிர்க்க வேண்டும்.

22. இருள் சூழ்ந்த இந்த மூன்று வாயில்களில் இருந்து தப்பித்துக் கொள்ளும் மனிதன் தன்னுடைய உயர்ந்த நலனுக்கு வழி தேடிக் கொண்டு அதிலிருந்து மகோன்னதமான நிலையையும் அடைகிறான்.

23. நியாயமான சாத்திர விதிகளைப் புறக்கணித்து விட்டு யார் சுயநலமான ஆசைகளைப் பூர்த்தி செய்துக் கொள்ள முற்படுகிறானோ அவன் சித்தியையோ, மகிழ்ச்சியையோ அல்லது உயர் நிலையையோ அடைவதில்லை.

24. ஆகையால் எது செய்ய வேண்டியது எது செய்யத் தகாது என்பதை நிர்ணயிப்பதில் நியாயமான நேர்மையான சாத்திரத்தையே முழுமுதலாகக் கொள்ள வேண்டும். அவற்றிற்கு இணங்க ஒருவன் தனது கடமையைச் செய்ய வேண்டும்.

இங்கே சாத்திரம் என்பது மனிதனுக்கு வாழ வேண்டிய ஒழுக்க விதிமுறைகளையும் பற்றற்ற சித்தாந்தங்கள் எவையோ அவைகளேயாகும்.

மனிதன் அசுர குணங்களை நீக்கித் தெய்விக குணங்களுடன் வாழ வேண்டுமென்றால், திடமான ஒருங்கிணைந்த மனநிலையுடன் புலன்வழி சுகங்களில் அளவுக்கு மீறி நாட்டம் கொள்ளாது ஒழுக்க விதிமுறைகளைப் பின்பற்ற வேண்டும்.

மனிதன் எதிலும் ஓர் அளவோடு இருக்கப் பழக வேண்டும். "அளவுக்கு மிஞ்சினால் அமிர்தமும் நஞ்சு ஆகும்'' என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

'நான்' 'எனது' என்ற சுயநலம் மட்டுமே என்றும் உள்ளவனாக இருத்தல் கூடாது. வாழ்வியலுக்குத் தேவையான மனவியல் இருத்தல் வேண்டும்.

# 6. மதம்

மதம் என்பது ஒருவரால் திணிக்கப்பட்ட கொள்கை அன்று, கொள்கையின் தொகுப்பும் அன்று. மதம் என்பது சில நம்பிக்கைகளின் தொகுப்பு. அது ஒரு நம்பிக்கையோ உணர்ச்சியோ மட்டுமல்ல. அது ஒருவரின் இன்னலோ, நோயோ வருத்தும்போது மட்டும் சொல்லும் பிரார்த்தனையும் அன்று. அது முக்கியமாக நல்லதும், தொண்டு நிறைந்ததுமான வாழ்க்கையின் வழிகாட்டி, மதம் என்பது இறைகுணம். எவன் ஒருவன் அன்பு, இரக்கம், இறையுணர்வு, உண்மை ஆகிய பண்பு களை உடையவனாக இருக்கிறானோ, எவன் நம்பிக்கை யுடனும் இறையுள்ளத்தோடும் இருக்கிறானோ அவன் உண்மையில் மதத்தில் ஈடுபாடு உள்ளவனாவான்.

நெற்றியில் சின்னங்களை அணிவதும், தலையில் சடைமுடியும், முகத்தில் தாடியும் வளர்த்துக்கொள்வதும்; கடும் வெய்யிலிலும், கடும் குளிரிலும் நிற்பதும்; காவி உடை அணிவதும், தலையை மழித்துக் கொள்வதும், மணி அடித்துக் கொண்டு இருப்பதும், சங்கை ஊதுவதும், தாளத்தை ஒலிப்பதும் மட்டுமல்ல மதம். உலகியல் வாழ்க்கையின் நடுவே நல்ல பண்புகளும், தூய்மையும், தொண்டும் அமைந்த வாழ்க்கைதான் உண்மையில் மதம் என்பதாகும்.

இறைவனில் வாழ்வதே மதம் என்பதாகும். அது இறைவனுடைய இயல்பைப் பற்றி வாதம் செய்வது மட்டுமன்றி, இறைவனை அறிவால் ஒத்துக் கொள்வது மட்டுமே உண்மையில் மதமாகாது. மதம் என்பது வாதத்திற்கு அப்பாற்பட்டது. நமக்குள்ளேயும் வெளியே யும் காணப்படும் வாழ்க்கையே மதமாகும், இறைவனை உணர்வதும் அவனாகவே மாறி விடுவதும்தான மதம்.

சொந்த விருப்பு வெறுப்புகளும் கொள்கையில் பிடிவாதமும், வெறியோடும், குறிப்பிட்ட பிரிவில் மட்டும் நாட்டம் உள்ளவர்களுடைய கருத்துக்களும் நம் கண் களை மறைத்து மதத்தைப் பற்றி ஒரு குறுகிய நோக்கம் கொள்ளுமாறு செய்யாமல் இருக்கட்டும். பகுத்தறி வுடனும், வேற்றுமைகளைக் கண்டறியும் தன்மையுடனும் மதம் தத்துவம் ஆகியவைகளிலுள்ள முக்கியமானவை களையும், முக்கியமல்லாதவைகளையும் அறியும் தன்மை நமக்கு இருக்க வேண்டும். எல்லா மதங்களின் முக்கியமான கோட்பாடுகளும் ஒரே மாதிரியானவை தான். அவை எல்லாம் ஒத்துப்போகின்றன. முக்கிய மல்லாத பொருள்களில்தான் அவை மாறுபடுகின்றன.

மதம் என்பது இறைவன், உலகம், மனிதன் ஆகிய மூன்று அடிப்படைத் தத்துவங்களின் உறவாகும். மதம் இவ்வுலகத்தில் தோன்றிய மனிதன் களைப்படையும் போது அவனுக்கு ஆறுதல் கொடுக்கிறது. இந்த உலக வாழ்க்கையின் இரகசியத்தை மனிதனுக்கு மதம் விளக்கிச் சொல்கிறது. என்றும் அழியாத பேரின்ப வீட்டிற்கு அது வழிகாட்டுகிறது.

மதம் என்பது இந்த உலக வாழ்க்கையை வெறுத்து ஒதுக்குவதன்று. அது வாழ்க்கையின் நிறைவு ஆகும். அது என்றுமுள்ள நிரந்தரமான வாழ்வாகும். ஒழுக்கம், சுயக்கட்டுப்பாடு, தியானம் ஆகியவற்றின் மூலம் மனிதன் இறைவனாகிறான். அதுதான் மதம்.

பிறருக்கு நன்மை செய்வதிலும், பிறரிடம் அன்பு காட்டுவதிலும், இரக்கம் காட்டுவதிலும், உண்மையிலும் வாழ்க்கையின் எல்லாத் துறைகளிலும் தூய்மையோடிருப்பதும் தான் மதம்.

மதம் என்பது நடைமுறை வேதாந்தம். வேதாந்தம் என்பது நடைமுறை மதம். ஆராய்ச்சி, வினாவுதல், விசாரணை ஆகியவை வேதாந்தம் எனப்படும். அறிதல், உணர்தல், அனுபவம் என்பவை மதம் எனப்படும்.

தனி மனிதர்களின் மனநிலைகளும் தொன்றுதொட்டு வரும் பழக்கங்களும் வெவ்வேறானவை. எனவேதான் உலகில் வெவ்வேறு மதங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு மதமும் நல்லவையே கூறுகின்றன. பசுக்கள் பலநிறம், ஆனால் அவை கொடுக்கும் பால் ஒரே நிறமாகிய வெள்ளை ரோஜா மலர்களில் பல வகைகள் இருக்கின்றன அவைகளின் மணம் ஒன்றாகவே இருக்கின்றது. மதம் என்பதும் ஒன்றுதான் அதை நடைமுறையில் அனுசரிப்பதில்தான் வேறுபடுகிறது

மதம் ஒருவரை முழுமைப் பெறச் செய்து உரிமை உடையவராகச் செய்யவேண்டும். மதம் ஒருவரைத் தளைகளினின்றும் விடுதலைப் பெறச் செய்யவேண்டும். மதம் மனிதனைப் பிறப்பு இறப்பு ஆகிய சூழலிலிருந்து விடுதலைப் பெறும் துணிவைத் தரவேண்டும்.

மதம் என்பது நன்மை, இன்பம் ஆகிய எல்லாவற்றின் ஆதாரமாக இருத்தல் வேண்டும். தனிமனிதனின் பண்பு, வளர்ச்சி ஆகியவற்றின் துணையாக இருத்தல் வேண்டும். தனி மனிதனுக்கு உதவுவதின் மூலம் நாட்டின் முன்னேற்றத்திற்கும் உதவ வேண்டும். நாகரிகம் ஒழுங்கு நல்லொழுக்கம், மற்றும் மனிதனுடைய நிலையை உயர்வு செய்து நாட்டில் அமைதி ஏற்பட வழி செய்யவேண்டும்.

"உண்மையான மதம் என்பது ஒன்றுதான்; அது சத்தியம், அன்பு என்ற மதம்தான்; அது உள்ளமாகிய மதம்; சேவை தியாகம் துறவு என்னும் மதமே அது. அனைத்து மதங்களின் அடிப்படைக் கொள்கைகள் ஒரே மாதிரியானவை"— சுவாமி சிவானந்தர்.

நமது நாட்டைப் பொருத்த வரையில் இந்து மதம் தான் பழமையானது. பல மதங்கள் உண்டாவதற்கும் முன்பே இம்மதம் உருவாயிற்று இந்து மதத்தைத் தவிர மற்ற மதங்கள் ஒரு மகானின் பெயரால் ஏற்பட்டவை களாகும். அந்த மகானுக்கு முன்பு அந்த மதம் இருந்த தில்லை.

புத்த மதம் என்றால் அது கௌதமபுத்தரின் பெயரால் உண்டாக்கப்பட்டது. ஜைன மதம் என்றால் அது மஹாவீரர் எனப்படும் ஜீனரின் பெயரால் உருவாக்கப் பட்டது. இப்படித்தான் கிறித்துவ மதம் என்றால் ஏசுகிறிஸ்துவின் பெயரால் உருவாக்கப்பட்டது. இப்படித் தான் இஸ்லாமும் முகமது நபிகளால் உருவாக்கப் பட்டது. இப்படி ஒவ்வொரு மகானின் பெயரால் ஒவ்வொரு மதமும் உருவாக்கப்பட்டது.

இந்த மதங்களுக்கெல்லாம் முன்பே இந்து மதம் இருந்திருக்கிறது. ஆனால் இதற்கு இந்து மதம் என்கிற பெயர்தான் அப்போது இல்லை. பெயர் இல்லாத இந்த மதத்தை யார் உருவாக்கியவர் என்று எப்படி ஆராய்ந் தாலும் அப்படி ஒரு உருவாக்கியவர் இருந்ததாகத் தெரிய வில்லை. வேத காலம் தொடங்கி இதில் பல நெறிகளும், கொள்கைகளும், தத்துவங்களும் அவ்வப்போது இணைந்து வளர வழி ஏற்பட்டு வளர்ந்ததாகும்.

இந்து மதத்தின் வித்துக்கள் ருக்கு வேதத்தில் காணப் படும் துதி வடிவமான மந்திரங்களில் அடங்கியிருக் கின்றன. இது கி.மு. 2000 ஆண்டுகளுக்கு முற்பட்ட காலமாகும். மந்திரங்களில் தீ, காற்று, நீர் முதலான

இயற்கைச் சக்திகளை மக்கள் இறைவனாகப் போற்றி னர். பின்னர் அந்த இயற்கையாற்றல்கள் எல்லாம் ஒரு பரம்பொருளின் கூறுகளே என்ற கருத்து வளர்ந்து அதற்கு ஏற்றாற்போல் துதிப்பாடல்கள் அமைந்தன.

வேதங்களைத் தொடர்ந்து உபநிடதங்கள் இந்து மதத் தத்துவங்களை மேலும் விரிவாகச் சொல்லி விளக்கின. இவற்றிலிருந்துதான் பிற்காலத்தில் பற்பல வகைகளில் தத்துவ விசாரணைகள் எழுந்தன. உபநிட தங்களை அருளியவர்கள் சிறந்த ஞானிகள். இவர்கள் தான் மனிதனின் குடும்ப வாழ்க்கையும் அவர்கள் செய்த வினையும் பிரிக்க முடியாதவைகள் என்பதை எடுத்துச் சொன்னவர்கள்.

இந்து மத ஆராய்ச்சிக்கு உபநிடதங்களைத் தவிர, தரிசனங்கள் எனப்படும் மீமாம்சை, வேதாந்தம், சாங்கி யம், யோகம், நியாயம், வைசேடகம் ஆகிய ஆறு சாத்திரங்களும் தோன்றின. இவைகளில்தான் வேதத்தின் உண்மை, கருமத்தின் பயன்கள், ஜீவாத்மா— பரமாத்மா தொடர்புகள் உருவாக்கப்பட்டன.

இதற்குப் பின் இதிகாசங்கள் தோன்றின. கி. மு. 200 ஆண்டுகளுக்கு முன்பான காலத்தை இதிகாச காலமென் பர். இந்தக் காலத்தில்தான் இராமாயணம்— மகாபார தம், மனு, யாக்ஞவல்கியர் எழுதிய தரும சாத்திரங்கள் தோன்றின. இவற்றில் வேதத்தின் கருத்துக்களும், உபநிடதத்தின் கருத்துக்களும் கதைகளாகவும், உரை யாடல்களாகவும் விளக்கப்பட்டன.

இப்படி உருவான கதைகளில்தான் கதாபாத்திரங் களையெல்லாம் இறைவனாக உருவாக்கி அதன்மூலம் மக்களுக்கு அறிவுரை வழங்க எண்ணினர். இதில் வரும் உத்தமத் தலைவர்களின் வாழ்க்கை முறையையும், நெறி களையும் அறிந்து அதன்படி தன் வாழ்விலும் நடக்க

வேண்டும் என்று மக்கள் எண்ணி வாழத் தலைப்படுவர் என்று நம்பினர்.

தருமத்தைக் காக்கவும், அதருமத்தை அழிக்கவும் இறைவன் அவதரிக்கிறார் என்ற நம்பிக்கையை வேரூர வைத்தனர். இவைகள் பரவலாகப் பரவி எல்லா மொழியினரையும் கவர்ந்தது. இதனால் பக்திநெறி தோன்றி வளரத் தொடங்கியது. அவரவர் அந்தந்த மொழிகளில் வடமொழியில் இருந்து மொழிபெயர்த்து மகிழ்ந்தனர். பிற்காலத்தில் வைணவ ஆழ்வார்களும், நாயன்மார்களும் தோன்றி பக்திநெறியைத் தழைக்கச் செய்தனர்.

"இறைவன் எல்லோருக்கும் அருள்பவன் ; ஏழை, பணக்காரன், உயர்ந்தவன், தாழ்ந்தவன் என்றெல்லாம் பாராமல் கருணை செய்பவன். அவனை பக்தியாலும் சரணடைவதாலும் அவனருளைப் பெற்று முக்தியடையலாம்" என்ற கொள்கை பரவி மக்களை அருள் நெறியில் ஈடுபடுத்தியது.

இப்படி அறநெறி அருள்நெறியாக மாறி, இறைவனுக்குப் பல உருவங்கள் தோன்றி, மெல்ல மெல்ல கற்பனைக் கதைகள் எல்லோரும் நம்பும்படி எல்லாமே இறைவனால் நடந்தது என்பது மட்டும் அல்ல இறைவனையே கதாநாயகர்களாக உருவாக்கி உபதேசிக்கும் முறைகள் வரத் தொடங்கின.

பாமர மக்கள் இன்றைய அரசியல் இயக்கங்கள் போல் அவரவர்க்குத் தோன்றிய பிரிவுகளை நம்ப வேண்டிய சூழ்நிலைக்குத் தள்ளப்பட்டார்கள்.

அத்வைதக் கொள்கையைப் பரப்பச் செய்தார் சங்கராச்சாரியார். விசிட்டாத்துவைத சித்தாந்தத்தை வகுத்துரைத்தார் இராமாநுசர். துவைதம் என்பதை எடுத்துணர்த்தினார் மத்துவாச்சாரியார்.

இவர்களுக்கும் பின் இராமானந்தர், கபிலர், நானக், மீராபாய், வல்லபர், சைதன்யர், துளசிதாசர், துக்காராம் இப்படிப் பலபேர்கள் தோன்றி அளவிலாத பக்திப் பாடல்களைப் பாடி மக்களிடம் அவைகளைப் பரப்பினர்.

இறைவன் என்பது இயற்கையே— அறநெறியும் அருள் நெறியும் அன்பு உள்ளமாக ஏற்று மனிதன் வாழ வேண்டும் என்று அனைத்திலுமே இருந்தாலும் 'இந்த உலகில் வாழும் போது தான் செய்கின்ற தவறுகளைத் திருத்திக் கொள்வான் மனிதன்' என்கின்ற உணர்விற்காக முக்தியென்று ஒன்று உண்டு என்பதை அனைவருமே சொல்லத் தலைப்பட்டனர். இந்த நம்பிக்கை பிற மதங்களிலும் இருப்பதைக் காண்கிறோம்.

எனவே எல்லா மதங்களும் ஒரு கொள்கையின் ஆணிவேரே. ஆனால் மதங்கள் மனிதனை மனிதனாக ஆக்க முயல வேண்டுமே ஒழிய அதில் உயர்வு தாழ்வு என்ற பேதத்தையும், மூடநம்பிக்கைகளை விட்டு இறையாண்மையை எடுத்துச் சொல்லும் நல்ல அமைப்பாக இருக்க வேண்டும்.

# 7. சித்தர்களின் தத்துவம்

எல்லாச் சித்தர்களுமே சமுதாய சீர்திருத்தவாதிக ளாகவே வாழ்ந்தனர். ஆனால் திருமூலர் அதில் தொன்மையானவரும் அவர்களுக்கு வழிகாட்டியாகக் கூறப்படுபவரும் ஆவார்.

''மயக்கும் சமய மலமுன்னு மூடர்'' எனச் சமயத் தினைச் சாடுகின்றார். அறிவை மயக்கும் சமயம் என்னும் இழிந்த இயல்பை உடைய மலப் பொருள் என்பது பொருள். போதைத் தந்து அறிவை மயக்குவன பல உள. அவற்றுள் சமயமும் ஒன்று. அறிவு அழியுமேயாயின் மனிதனின் தனித் தன்மை கெடும். மனிதன் உணர்வு மேலோங்கப் பெறுவான். விலங்கோடு ஒத்த நிலை யடைவான். சமயக் காலத்தில் இருந்த பூசல்கள் அனைத் தும் இதனால் நிகழ்ந்தனவே. எனவேதான் 'மயக்கும் சமயம்' என்றார்.

காரணம், இறைவன் ஒன்றே என்னும் விழுமிய எண்ணம் கொண்டவரும், மெய்ஞ்ஞானமாகிய உயரிய நிலையடைவாரும் போற்றும் நன்னெறி நிற்கும் ஞானி யரையும் மயக்கும் வன்மை வாய்ந்தது.

**''சாத்திரம் ஓதும் சதுர்களை விட்டுநீர்**
**மாத்திரைப் போது மறித்துள்ளே நோக்குமின்''**

சமயத்தைச் சாடுவதைப் போலவே அதன் அடிப் படையாய்த் தோன்றிய சாத்திரங்களையும், சடங்குகளை யும் சம்பிரதாயங்களையும் சாடுகின்றார்.

சாத்திரம் முதலியன பேசிக் காலத்தைப் போக்குவதை விட்டுச் சிறிது நேரம் உள்ளே இருக்கும் உயர் பொருள் களை நோக்க முயலுவது பயனுடையதாக இருக்கும். அதை விடுத்து இறைவனைப் பற்றிக் கூறுகின்ற புராண இதிகாசங்களை யெல்லாம் படித்துப் படித்து ஆராய்ந்து விவாதம் செய்வதால் எவ்விதப் பயனும் விளையப் போவ தில்லை. உலகில் விவாதத்தால் விளங்குவன, தெளி வடைவன சிலவே. இறைவன் விளக்கி அறியப்படுபவன் அல்லன். விளங்கி உணரப் படுபவன். இதையே மேற்கண்ட வரிகளில் கூறுகின்றார். இறைவன் வடிவத் தைக் கோயில் கோயிலாகச் சென்று தரிசிக்கத் தேவை யில்லை யென்றும் கூறுகின்றார்.

**"முகத்திற் கண்கொண்டு காண்கின்ற மூடர்கள்**
**அகத்திற் கண்கொண்டு காண்பதே ஆனந்தம்"**

இறைவனை முகத்தில் இருக்கும் புறக் கண்களைக் கொண்டு தேடித் தேடிப் பார்க்கும் மூடர்களே உள்ளத் தின் கண்கொண்டு கண்டு மகிழ்வீர்களாக. இதுவே உண்மை இன்பத்தை அளிக்க வல்லது, என்றும் இறைவன் உள்ளத்தை கோயிலாகக் கொண்டவன் இயங்கும் உயிர்கள் அனைத்தும் இறைவன் கோயில் என்பதும் தான் திருமூலர் தத்துவம்.

இத்தத்துவத்தின் அடிப்படையிலே அவரது உலக அறிவுரையும், சமுதாயச் சீர்திருத்தமும் அமைகின்றது. அனைத்து உயிரும் இறைவன் கோயிலாக இருக்குமானால் அனைத்தும் ஒன்றே யென்பதும், உயர்வு தாழ்வு வேறுபாடு இல்லை என்பதும் தெளிவு.

**"ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்**
**நன்றே நினை மின்."**

இது திருமூலரின் அறிவுரை. உயிர்க் கூட்டம் அனைத்தும் ஒன்றுதான்; அவற்றின் தலைவனும் ஒன்று தான்.

**"ஒன்றுகண் டீர்உல குக்கொரு தெய்வமும்**
**ஒன்றுகண் டீர்உல குக்குயி ராவதும்"**

என்பதும் மேற்கூறிய கருத்துடையதானதாகும். மேலும் மனித சமுதாயத்துக்கென பல பாடல்கள் இயற்றியுள்ளார் திருமூலர்.

**"ஆர்க்கும் இடுமின் அவரிவர் என்றன்மின்**
**பார்த்திருந் துண்மின் பழம்பொருள் போற்றன்மின்"**

யார் எது வேண்டி வரினும் இருப்பின் இயன்றது தருக; இவர் பகைவர், இவர் நண்பர் என வேறுபாடு கொடுத்தலில் இருத்தல் கூடாது; இல்லாதார் எவரா யினும் தருதல் வேண்டும். உண்பதன் முன் யாரேனும் வருவரோ? கொடுத்தபின் உண்ணலாம் எனப் பார்த்துப் பின்னரே உண்ண வேண்டும்.

பழமை எனச் சில தேவையற்ற சடங்குகளையும் சம்பிரதாயங்களையும் போற்றுதல் தவிர்க்க வேண்டும்.

**"ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்**
**ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்"**

ஆசை எத்தகையது ஆனாலும் அவைகளை அறுத்தல் வேண்டும். இவ்வுலகியல் ஆசையாயினும், மேல் உலகு பற்றிய ஆசையாயினும் துறக்க வேண்டும்.

**''செல்வம் கருதிச் சிலர்பலர் வாழ்வெனும்**
**புல்லறி வாளரைப் போற்றிப் புலராமல்**
**இல்லறங் கருதி இறைவனை ஏத்துமின்''**

பொருள் இல்லார்க்கு இவ்வுலக இன்பம் ஏதுமில்லை என்பது உண்மையே யெனினும் அதற்காகக் கீழ்த்தரமான இயல்பு கொண்டவர்களை எடுத்துப் பாராட்டுவதைத் தவிர்க்க வேண்டும் அது வீண் முயற்சி. புல்லறிவாளன் எத்துணைத் தந்தாலும், எத்துணை தராவிட்டாலும் பயன் இல்லை. நாளெல்லாம் அவனைப் பாராட்டி காலத்தை வீணாக்குவதைக் காட்டிலும் இறைவனை யெண்ணி அதனால் கிடைக்கும் அருளைப் பெறுவது நிலையானது, குறையாதது.

இறைவனைப் பாடின் அருள் பெறுவது உறுதி. அது இன்மையைத் தராது என்று உறுதியாகச் சொல்லுகின்றார்.

**''அவ்வியம் பேசி அறங்கெட நில்லன்மின்**
**வெவ்விய னாகிப் பிறர்பொருள் வவ்வின்மின்''**

பொறாமையால் அறங் கெடுமாறு வாழ்தல் தவிர்க்க வேண்டும். பேராசையுடையவனாகிப் பிறர் பொருளை அவாவுதல் நீக்க வேண்டும்.

பொதுவாக இலக்கியம் என்பது வாழ்க்கையைக் காட்டும் கண்ணாடி என்பர், எந்த நாட்டு இலக்கியமாக இருப்பினும் அவை மக்கள் வாழ்க்கையின் பின்னணியை வைத்தே எழுதப்பட்டிருக்கும். இவற்றின் வாயிலாக சமுதாய நிலையைக்கூட விளங்கிக் கொள்ள முடியும். திருமூலர் காலத்திலேயே பல சமயங்கள் தலைதூக்கி இருத்தல் வேண்டும் என்று ஐயமறத் தோன்றுகிறது.

தமிழகத்தை பொறுத்த வரையில் சமயத் துறையில் புறப் பகையும், அகப் பகையும் இடம் பெறுகின்றன.

புறப் பகை என்பது சமணம், பௌத்தம் முதலான புறச் சமயங்களின் நுழைவால் ஏற்படும் பகைமை. அகப் பகைமை என்பது தமிழகத்தில் இயல்பாகத் தோன்றிய வைணவ சைவ சமயங்களுள் பகைமை. சங்க காலத்தில் அகப் பகை திருமூலர் காலத்தில் தோன்றி யிருக்கக் கூடும். சமயங்களுள் பகைமை இருந்திருக்குமே யானால் சமயப் பற்று மிக்கவர்கள் இருந்திருப்பர் என்பதும் தெளிவு. எனவேதான் "நீங்காச் சமயத்துள் நின்றொழிந்தார்களே" என்று வேதனையோடு எழுதினர்.

திருமூலர் காலத்திலேயே ஆறு சமயங்கள் தமிழகத் திலே இருந்திருக்கின்றன என அறிய முடிகிறது ஆறு சமயங்கள் எனக் குறிப்பு வருகின்றதே தவிர, அந்த ஆறு சமயங்கள் இவையிவை என்று பெயர் குறிக்கப் பெற வில்லை. இதனால் மக்கள் இடையே காழ்ப்புணர்வு இருந்தது என்பதை மட்டும் உறுதியாக அறிதற்கு முடிகிறது.

''ஒத்த சமயங்களில் ஓராறு வைத்திடும்
அத்த னொருவனாம் என்ப தறிந்திலர்''

சமயங்கள் ஆறும் ஒன்றே; அவற்றின் தலைவனும் ஒருவனே என்பதை ஏனோ அறிந்திலர் என்கிறார்.

''ஒன்றது பேரூர் வழியா றதற்குள
என்றது போல இருமுச் சமயமும்
நன்றிது தீதிது என்றுரை யாளர்கள்
குன்று குரைத்தெழு நாயையொத் தார்களே"

பேரூர் ஒன்றுக்கு வழி பல இருப்பது போலவே இறையை அடையப் பல சமயங்கள், இதனை அறியாமல் குன்றைப் பார்த்துக் குரைக்கும் நாயைப் போல, எவ்விதப்

பயனும் இல்லாமல் மக்கள் தமக்குள் போரிட்டுக் கொள்கின்றனர். என்கிறார் திருமூலர்.

சமயத்துறையில் ஏற்படும் பூசலுக்கும் உருவ வழிபாடும் காரணமாகும் ஒவ்வொரு சமயமும் இதுதான் இறைவன், இதனைத் தொழுதலே சிறப்பு என்று பறைசாற்றி மக்களை வெவ்வேறு பாதைகளில் வழி நடத்த முயன்றார்கள்.

கோயில் முதலியனவற்றிற்கு முக்கியத்துவம் தர வேண்டிய நிலையோடு சாத்திர சம்பிரதாயங்களுக்கும் சடங்குகளுக்கும் இடம் தரும் நிலையையும் ஏற்படுத்துகின்றது என்பது உண்மை. உருவவழிபாட்டினால்தெய்வங்களுக்கு இயல்பு முதலியன கற்பிக்கப்படுகின்றன. ஒன்றுக்கொன்று மாறுபட்ட இயல்புகள் பல எழுகின்ற காரணத்தால் இறை வழிபாட்டில் இறங்குபவர்க்கும் இப்பகைமை உணர்வு தோன்றுகிறது. அனைத்துச் சமயங்களும் ஒன்றுபடுவது— வற்புறுத்துவது 'அன்பே இறைவன்' என்பது திருமூலர் தத்துவம். எனவேதான் அவர் வேற்றுமை இல்லா அன்பு நெறியை வலியுறுத்துகிறார்.

**"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலர்**
**அன்பே சிவமாவ தாரும் அறிகிலார்"**

இறைவன் வேறு, அன்பு வேறு என்பர் ; இரண்டும் ஒன்றே என்பது அறியாதார் என்பதே திருமூலரின் தலையாய சமுதாயத் தத்துவம். அதுமட்டுமல்ல அனைவரும் உணர வேண்டிய உண்மையும் கூட— 'அன்பே இறைவன்.'

# 8. திருவள்ளுவரின் அன்பும் அருளும்

மனித வாழ்க்கைக்கு இலக்கணம் வகுத்தவர்களில் திருவள்ளுவரை விட உயர்ந்தவர் இருக்க முடியாது. 'ஒன்றே குலம் ஒருவனே தேவன்' என்று திருமூலர் சொல்லியிருந்தாலும், இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அந்தக் கருத்தைக் கூறியவர். தனிமனித வாழ்க்கைச் சிறப்பில் தான் ஒரு நாடேயுள்ளது யென்பதை யும் அழகாக பொருட் செறிவோடு— உறுதியாகக் கூறியவர் வள்ளுவப் பெருந்தகை.

சமுதாயமாக வாழும்போது தனிமனிதன் தள்ள வேண்டிய சில செயல்களையும், கொள்ள வேண்டிய பல உண்மைகளையும் ஆணித்தரமாக கூறுகின்றார்.

அறம் அல்லாத வழியிலே பொருளை ஈட்டாதே. இன்பத்தைக் காண முயலாதே, பிறர் பொருளை விரும்பி அலையாதே, புறங்கூறி பொய்த்து உயிர் வாழாதே, பயனற்ற சொற்களைப் பேசும் பதராக விளங்காதே, பொறாமையுற்றுப் புழுங்காதே, தீயைவிடக் கொடிய தீயச் செயல்களைப் பிறருக்குச் செய்யாதே எனப் பல அறிவுரைகள்.

சமுதாய வாழ்விற்கு அழிவு தரும் செயல்களைச் செய்வோரை வலிவோடு சாடுகிறார். இம்மை மறுமை

ஆகிய இரண்டின் இன்பத்தையும் இழக்க வேண்டி நேரிடும் என்று எச்சரிக்கிறார்.

தன்மேலே நின்று கொண்டு, தன்னையே வெட்டு வோரையும் நிலம் பொறுமையாகத் தாங்கிக் கொள்கிறது. அதுபோல நம்மாலே வளர்ந்தவர்கள், நம்மையே வருத்து கின்ற கொடிய நேரத்திலும் அவர்களைப் பொறுத்துக் கொள்வதே தலையாய அறமாகும்.

தண்டிப்பதற்கு ஏற்ற தருணம் வாய்த்தாலும், பிறர் செய்த தவறைப் பொறுப்பதே மேல்; அதனினும் அவற்றை அப்பொழுதே மறந்து விடுவது நல்லது.

தவறு புரியும் மக்களைத் தண்டிப்போரை, உலக மக்கள் உயர்வாகப் போற்ற மாட்டார்கள் ; ஆனால் அவற்றை மன்னித்தவர்களையோ மனதில் பொன்னாகப் போற்றுவார்கள்.

தண்டிப்பவர்க்கோ ஒரு நாளை இன்பம்; ஆனால் மன்னிப்பவர்க்கோ மங்காத புகழ் என்றும் சேர்ந்து விடும். தகாத செயல்களைப் பிறர் செய்தால் அவற்றை மீண்டும் அவர்களுக்கே திருப்பிச் செய்திட தோன்றும். ஆனால் நாம் வருந்தியது போல் அல்லவா அவர்களும் வருந்துவர் ? என்று இரங்கி அவற்றை மீண்டும் அவர் களுக்குச் செய்யாது விடுவதே சிறந்த பண்பாகும்.

எத்தகைய சிறு உயிருக்கும் தீங்கு நேர்ந்தால் அது தனக்கே நேர்ந்ததாக எண்ணி, அதனை நீக்க வேண்டும். அவ்வாறு நீக்கவில்லையென்றால் அறிவு இருந்து பயன் என்ன ?

'புடமிடப் புடமிடப் பொன் ஒளிவிடும்; துன்பங்கள் வரவர பெருகி விடும்.'

'தன்னுயிரை ஒடுக்குவோனை மன்னுயிரெல்லாம் தொழும்.'

'தாமும் இன்புறுவர்; உலகையும் இன்புறச் செய்வர் அவரே கற்று அறிந்தார் ஆவர்.''

இப்படி மனிதனுக்கு வள்ளுவர் கூறிய அறிவுரைகள் பல.

**''அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்**
**புல்லார்ப் புரள விடல்.''**

அருள் உலகமாக இந்த உலகம் மாற வேண்டுமானால் என்ன செய்ய வேண்டும? வறுமையை ஒழிக்க வேண்டும், அறியாமையை நீக்க வேண்டும். இன்ப வாழ்வு நிலைக்க வேண்டும். உலகத்தை எல்லாம் ஒரு குடும்பமாக கொண்டொழுகும் அருள் ஒழுக்கமும் அன்பில் பழகிய பழக்கமேயாம். அன்பில் பழுப்பது அருள். ஒரு தாய் வெறுங்கையோடு இருந்தால் பயன் என்ன? உடலில் வன்மை இல்லாது பட்டினி கிடக்கும்போது அந்தத் தாய் தன் குழந்தைக்குப் பாலும் கொடுக்க முடியாது. பால் கொடுத்து வாழ பொருள் வேண்டும். பொருள் இருந்தால் தான் குழவி பிழைத்திருக்கும். எனவே, வீட்டுலகையே மக்களனைவரும் பெறவேண்டும் என்று முயல்கின்றவர்கள் அத்தனை பேரும் பொருளை நம்பித்தான் வாழ வேண்டியிருக்கிறது.

மக்களிடம் கடவுளைக் கண்டு வழிபடுகிற கொள்கையை ஒரு வகையில் பொது உடைமைக் கொள்கை எனலாம். பழைய சமயத்தின் உயர்வெல்லாம் இதிலும் இருக்கிறது. எனவே இன்று பொருளாதாரமே சமயமாகவும் காட்சியளிக்கிறது. இதனால்தான் வீட்டுலகையே நம்பிய காந்தியடிகள் போன்றவர்கள் மலைக்கு ஓடிப் போய்த் தவம் செய்ய முயலாமல், மக்கள் இடையே வாழ்ந்து மக்களுக்காகவே தன் வாழ்வைத் துறந்து மக்களில் ஒரு துறவியாக வாழ்ந்து காட்டி நம்மிடையே அன்பையும் அருளையும் நிலை நாட்டினர்.

அன்பைப் பற்றி திருவள்ளுவர் கூறும் போது,

"அன்பிற்கும் உண்டோ அடைக்கும் தாழ்?" என்று வியந்து கூறி நிச்சயம் இருக்க முடியாது என்று திட்ட வட்டமாக விளம்புகிறார். அன்பு தனது கண்களில் இருந்து வெளிவரும் கண்ணீராக பலரும் அறிய வெளிப் படுத்திவிடும். அன்பு இல்லாதவர் எல்லா பொருள்களை யும் தமக்கே உரிமையாக கொண்டு வாழ்வர்; அன்பு உடையர் தம் உடம்பையும் பிறர்க்கு உரிமையாக்கி வாழ்வர்.

மனிதனுக்குள்ள அருமையான உயிர்க்கு தன் உடலோடு பொருந்தியிருக்கின்ற உறவு, அன்போடு பொருந்தி வாழும் வாழ்க்கையின் பயனாக இருக்கும்.

அன்பு உள்ளவனை எல்லோரும் விரும்புவார்கள். எல்லோரையும் விரும்பி நட்போடு வாழ வைக்கும் சக்தி அன்பு ஒன்றுக்கேயுண்டு. ஒருவனின் வாழ்க்கைப் பயன் அனைவரோடு அன்புடன் வாழும் வாழ்க்கையில் தான் இருக்கும். அன்பின் சிறப்பு வேறு எதிலும் இருக் முடியாது.

உலக அனுபவம் அற்றவர் அறத்திற்கு மட்டுமே அன்பு துணையாகும் என்று கருதுவர். ஆனால் அன்பு வீரத்திற்கும் துணையாகவே நிற்கும்.

எலும்பு இல்லாத உடம்போடு வாழும் புழுவை வெயில் காய்ந்து வருத்துவது போல் அன்பு இல்லாத உயிரை அறம் வெகுவாக வருத்தும்.

அன்பு இல்லாமல் ஒருவன் வாழ இயலும் என்றால் பாலைவனத்தில் பட்ட மரம் துளிப்பது போன்றதாகும். அன்பு என்பது வெளியே தெரியாது. மனிதனின் எல்லா உறுப்புகளும் நல்ல நிலையில் இருப்பினும், சிறப்பாக இயங்கினாலும் அகத்தே அவனுக்கு அன்பு இல்லாத

வனாக இருப்பானாயின் அதனால் அவனுக்கும் பிறர்க்கும் ஒரு பயனும் இல்லை.

**''அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு**
**என்புதோல் போர்த்த உடம்பு''**

ஒரு மனிதனுக்கு அன்பின் வழியில் இயங்கும். உடம்பே சிறப்பானதாகும். அன்பு இல்லாதவனுக்கு இருக்கும் உடம்பை உடல் என்று கூறுவதைக் காட்டிலும் எலும்பைத் தோல் போர்த்திய வெற்றுடம்பு என்றே கூற வேண்டும் என உறுதியாக கூறுகின்றார்.

ஒரு மனிதனுக்கு உள்ள செல்வங்களில் எல்லாம் உயர்ந்த செல்வம் அன்பும் அருளும் தான் என்பது திருவள்ளுவரின் திடமான நம்பிக்கை.

மேலும் திருவள்ளுவர் ஐம்புலனின்பம் பற்றி கூறிய தாவது யாதெனில் மனிதனுக்கு ஆக்கம் தரும் இன்பங்கள் துன்பங்கள் எல்லாம் உண்மை இன்பங்கள் என்றும்; மற்ற இன்ப துன்பங்களை தீயன என்றும் கொள்ளலாம். நன்மை தீமை பாகுபாட்டின் தத்துவமும் இதுவே. அவாக்களுள் நல்லின்பமும் நலந்தருவதுமாகிய அவாவும் உண்டு. அந்த அவாதான் தனக்கென அமையாது மண்ணுயிர் ஓம்பும் பொதுநலத்தின் பாலும், செம்பொரு ளாகிய பரம்பொருளிடத்தும் அமைந்த அவா. இதனைத் தவிர ஏனைய அவாக்கள் தனக்கென அமைந்ததாகும்.

வினை, அறம் ஆகிய மனம், மொழி, மெய் என்ற மூன்றன் வகையாலும் செயல்படுவது போல, இன்பமும் அம்மூன்றன் வகையாலும், அம்மூன்றும் உள்ளிட்ட முக் கரணமும் உள்ளிட்ட ஐம்புலன்களாலும் நுகரப்படுவ தாகும். ஆனால் ஐம்புலன்களும் ஒரே இடத்தில் ஒரே பொருளில் ஒரே நேரத்தில் இன்பம் நுகர்தல் என்பது

இல்லற வாழ்க்கையிலேயே, இல்லத்திலேயே இல்லாளிடத்திலேயேயன்றிப் புற வாழ்க்கையில் நிகழ்வதன்று.

இல்வாழ்க்கையை அக வாழ்க்கை என்றும், வெளி வாழ்க்கையைப் புறவாழ்க்கை என்றும் கூறப்பெறும். புற வாழ்க்கையில் இயற்கை வனப்பினிடத்து கண்ணுக்கும் கருத்துக்கும் இன்பம். வண்ண மலரினிடத்து கண்ணுக்கும் கருத்துக்கும் மெய்க்கும் இன்பம். இசையினிடத்து செவிக்கும் கருத்துக்கும் இன்பம். பேசும் படக்காட்சியினிடத்து கண்ணுக்கும், கருத்துக்கும், செவிக்கும் இன்பம். இவ்வாறே புற வாழ்க்கையில் ஐம்புலன்களில் இரண்டு அல்லது மூன்றனுக்கே இன்பம் உண்டு.

மனிதனும், மற்ற உயிரினங்களும் துன்பம் இல்லாத வகையில் இன்பமாகவே வாழ விழைதல் இயல்பாக உள்ளது அனைத்துயிர்களும் அதற்கான முயற்சியையும் மேற்கொள்ளுகின்றன. அதன் பொருட்டு பல்வகை வினைகளையும் செய்கின்றன.

மனிதன் அனுபவித்தற்குரிய இன்பம்— சிற்றின்பம், பேரின்பம் என்று இருவகைப்படும். அவற்றுள் சிற்றின்பம் என்பது நிலையற்ற தன்மையதாகும். பேரின்பம் நிலையான தன்மையதாகும்.

சிற்றின்பத்துள் சில வகையுண்டு. அவை துன்பம் தரும் இன்பம், தற்காலிக இன்பம், நுகர்பவர்க்கு மட்டும் உரிய இன்பம் என்பவையாகும். பேரின்பம் என்றும் நிலை கொண்ட தன்மையதோடன்றி, நுகர்பவர்க்கும் பிறர்க்கும் நலம் பயப்பதாகும்.

பேரின்பத்தை உயர் இன்பம் என்றும், இடையறா இன்பம் என்றும், வீட்டின்பம் என்றும் இறையின்பம் என்றும், மீண்டும் பிறவா இன்பம் என்றும் வழங்கப் பெறும்.

பொதுவாக இன்பம் என்பது ஆக்கம் தருவதாகும். சிற்றின்பத்தாலும் ஆக்கம் உண்டு. பேரின்பத்தாலும்

ஆக்கம் உண்டு. சிற்றின்ப ஆக்கம் நிலையற்றது. பேரின்ப ஆக்கம் நிலையானது.

இன்பங்கள் ஆக்கம் தருவதுபோலத் துன்பங்களும் சில நேரங்களில் ஆக்கம் தருவதுண்டு. சிற்றின்ப வகையில் உள்ள எல்லா இன்பங்களும் ஆக்கம் தருபவை என்று கூறவியலாது. அது போலவே எல்லாத் துன்பங் களும் அழிவைத் தருபவை என்றும் கூறவியலாது. சில வகை இன்பங்கள் துன்பத்திற்கு வழி வகுத்தலும் உண்டு.

ஐம்புல இன்பம் அக வாழ்க்கையாகிய இல்வாழ்க் கையிலேயே உண்டு. இல்வாழ்க்கையில் 'இல்லாள்' என்னும் உரிமையும், தலைமையும் பூண்டு விளங்கும் இல்லாளிடத்து, இல்லத் தலைவியிடத்து ஐம்புலன்களுக் கும் உரிய இன்பம் உண்டு. உலகில் வேறு எதனிடத்தும் இல்லாத ஐம்புல இன்பம் தலைவியிடத்தே உள்ளது சிறப்பேயாயினும், அவ்வின்பம் நிலையற்ற தன்மைய தாகிய சிற்றின்பமே. தலைவி என்பவள் களவு நெறி வாழ்க்கை, கற்பு நெறி வாழ்க்கை என்ற இரண்டிற்கும் உரியவள். எனவே அவளிடத்துள்ள இன்பம் இருவகை வாழ்விலும் உள்ளதாகும். இந்த ஐம்புல இன்பத்தை திருவள்ளுவர்;

> **"கண்டு கேட்டு உண்டுயிர்த்து உற்றறியும் ஐம்புலனும்**
> **ஒண்டொடி கண்ணே உள."**

என்று களவியல் வாழ்வில் உள்ள தலைவியிடத்தே உள்ளதாக கூறுகின்றார். கண்களால் கண்டும், செவி களால் கேட்டும், வாயினால் உண்டும், நாசியால் முகர்ந்தும், மெய்யால் உற்றும் அறிந்து மகிழ்கின்ற ஐம்புலன்களால் ஆகிய இன்பங்களும் ஒளி பொருந்திய வளையல் அணிந்தவளிடத்தே உள்ளன என்று வள்ளுவர் எடுத்துக் கூறுகிறார்.

# 9. இறை தத்துவத்தின் உண்மை

உலகில் உள்ள ஒவ்வொரு செயலுக்கும் ஒரு காரணம் உள்ளது. எடுத்துக்காட்டாக, பூமி உருண்டை வடிவம், அது தன்னைத்தானே சுற்றி வருகிறபடியால், சூரிய உதயத்தையும் மறைவையும் நாம் ஏற்றுக்கொள்ளுகிறோம் ஆனால் சூரியன் மறைவதில்லை. பூமி சுற்றிக் கொண்டே இருப்பதால் சூரியன் மறைவதாக நாம் எண்ணுகிறோம். ஒரு நோய் ஏற்படின் அது எதனால் ஏற்படுகிறது. அதை இன்ன மருந்தால் குணமாக்கலாம் என்பதையும் ஏற்றுக்கொள்ளுகிறோம்.

அதேபோல் தான் எல்லா செயல்களும் காரண காரியமின்றி உலகில் ஏற்கப்படுவதில்லை. இறை தத்துவமும் அப்படியே உலக நன்மைக்காக ஏற்பட்டது. அதைப் பலவாறாக நம் முன்னோர்கள் மக்களுக்கு விளக்கியிருக்கின்றனர்.

இன்றைய நிலையில் உண்மை இறைத் தத்துவம் என்றால் என்ன என்பது நம்மில் மிகச் சிலருக்கே தெரிகிறது மற்றவர்களெல்லாம் கோவிலுக்குப் போய் கற்பூர தூபதீபம் காட்டி, நமக்கு இன்னின்ன வேண்டும் என வேண்டிக்கொள்வது மட்டும்தான், இறைவன் நமக்குக் காட்டிய வழி என எண்ணி நாட்களை வீணடித்துக் கொண்டிருக்கின்றனர்.

பரந்த இந்த உலகில் பல்வேறு உயிரினங்கள் விலங்குகள், ஊர்வன, பறப்பன, மற்றும் மனிதயினம் ஆகியவை தோன்றித் தோன்றி மறைந்துகொண்டே உள்ளன. தோன்றிய உயிரினம் மனித இனம் உள்பட அது மறையும் வரை வாழ்ந்தாக வேண்டும். அப்படி வாழ்வதற்கு வேண்டிய வசதிகளை அடைந்தாக வேண்டும். அப்படி வசதிகளை அடைய வேண்டித்தான் ஒவ்வொரு உயிரினமும் தன் வாழ்நாளில் முயலுகிறது.

உயிரினங்களிலேயே நன்கு மேம்படுத்தப்பட்ட, அறிவு செறிவூட்டப்பட்ட உயிரினம் தான் மனிதகுலம். ஏன் மனித குலத்திற்கு மட்டும் அவ்வளவு சிறப்பு என நாம் எண்ணிப் பார்க்க வேண்டும்.

ஆறறிவு படைக்கப்பட்ட மனிதன் தான் சிறப்பு உடையவன். எனவே தான் உயிரினங்களிலேயே மனித சக்திக்கு ஆற்றல் அதிகம். அப்படி நமக்குக் கொடுக்கப் பட்ட அறிவைப் பயன்படுத்தி நாமும் வாழ்ந்து, நம்மால் முடிந்த வரை பிறரையும் வாழவைத்தால் தான், இவ்வுலகில் படைக்கப்பட்ட எல்லா உயிர்களும் வாழ முடியும் என்பது தான் இறைவனின் பெருங் கருணையாக இருக்க வேண்டும்.

இறைவன் எப்பொழுதும் ஒரு துயருற்றஉயிரினத்தின் முன் தோன்றுவதில்லை அதற்குப் பதிலாக பல மகான் களை அவ்வப்பொழுது தோன்ற வைக்கிறார். அம் மகான்களின் மூலமாக, பாமர மக்களுக்கும் மற்றும் ஏனையோருக்கும் பல அரிய தகவல்கள் தெரிவிக்கப் படுகின்றன.

அவர்கள் மூடர்களையும் சிந்திக்க வைக்கிறார்கள். நாம் எதற்காகத் தோன்றினோம்? அதன் பயன் யாது? என தெளிய வைக்கிறார்கள். அதன் பயனாக ஒவ்வொரு

வரும் உலகில் உள்ள பல உயிர்களுக்கும் தம்மால் முடிந்த உதவிகளை செய்வதின் மூலம், எல்லா உயிர்களும் இனிது வாழ்கின்றன என்ற மாபெரும் தத்துவத்தை இறைவன் நம்மை கருவியாக்கி நிறைவேற்றிக் கொள்கின்றான்.

ரமண மகரிஷிகளிடம் ஒரு அடியவர் கேட்கிறார்: "நான் தெய்வத்தை அறிந்தால் அதனால் மற்ற உயிர் களுக்கு என்ன பயன்?" என்று. அதற்கு மகரிஷிகள் சொன்னார்: "உலகிலுள்ள எல்லா உயிர்களிடத்திலும் இறைவன் விளங்குகின்றான் என்ற உண்மை, தெய்வத்தை அறிந்தவனுக்கு நன்றாகத் தெரிந்து விடுகிறது. அப்போது தெய்வத்தினிடம் அவன் காட்ட வேண்டிய அன்பையே தெய்வ சொரூபமாகிய ஏனைய உயிர்களிடத்தும் காட்டி தன் தியானத்தாலும், மனத்தாலும், சரீரத்தாலும், உபதேசத்தாலும் இன்னும் எல்லா வழிகளிலும் அவர் களுக்கு அவன் உதவி புரிகின்றான்" என்றார்.

**"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதின்றேல்**
**தோன்றிற் தோன்றாமை நன்று"**

என திருவள்ளுவர் சொல்கின்றார். ஆக புகழ் எப்படி வரும், நம்மால் முடிந்த எல்லா வகை உதவிகளையும் பிற உயிர்களுக்கு செய்யும் பொழுது வரும்.

**"தானமும் தவமும் செய்வாராயின்**
**வானவர் நாடு வழிதிறந்திடுமே"**

என ஔவையார் கூறுகிறார். தானம் செய்வதால் பிறருக்கும் தவம் செய்வதால் தனக்கும் நன்மை என்பதை அவர் விளக்குகிறார்.

**"அகத்தே கறுத்து புறத்தே வெளுத்திராமல்"**

உள்ளத்தை தூய்மையாகவும், அன்பாகவும் இறைவன் செலுத்தி, அவர்தம் செயல்களை நாம் முழுமை பெறச்

செய்யவேண்டும். தேவையில்லாமல் கடன் வாங்கி யாவது, கோயில் குளம் என்று ஊர் சுற்றிக் கொண்டு நம் பொருளாதாரத்தை வீணடிப்பதினால் நமக்கோ, நம்மைச் சுற்றி சார்ந்திருப்போர்க்கோ சிறிதும் பயன் இல்லை.

நாம் நமது குடும்பத் தேவைகளைக் கவனித்து, குடும்பத்தார்க்கும், நம்மால் முடிந்தவரை ஏழை எளியவர்களுக்கும் இறைவனுக்குத் தொண்டு செய் வதைப் போல் நினைத்து ஈதல் வேண்டும். கடமைகளை ஒருபோதும் மறத்தல் கூடாது. பேராசைகளை அடக்கிக் கொள்ள வேண்டும். பொறாமையுணர்வு அறவே கூடாது. அவர்கள் அப்படி ! நாம் ஏன் இப்படி ? இது தேவையற்ற சிந்தனை. சிக்கனம் சிறப்பானதொன்றே, எளிமை ஏற்ற மிக்கதே. இவைகளே உண்மையான இறை தத்துவம் என்பதை உணர்வோமாக.

# 10. இறைவன் பற்றி ஆன்றோர்கள்

## திருநாவுக்கரசர் :

வாழ்க்கை அல்லது பிறவி என்பது, ஒரு பெரும் கடல். அந்தக் கடலில் வீழ்ந்து, நாம் தத்தளித்துக் கொண் டிருக்கின்றோம். அக்கடலைக் கடப்பதற்கு, மனம் ஒரு தோணியாக அமைகின்றது. அத்தோணியை இயக்கு வதற்கு, மதி என்னும் கோலை ஊன்றுகின்றோம். அதன் உதவியால் அத்தோணி ஒரு சிறிது செல்லத் தலைப்படு கின்றது. ஆனால் அத்தோணியில் நாம் நல்ல சரக்கை ஏற்றிக் கொண்டு செல்வதில்லை. காமம், பொறாமை, மயக்கங்கள் முதலிய தீய சரக்குகளையே மிகுதியாக ஏற்றிக் கொண்டிருக்கின்றோம். தாங்க முடியாத சுமை மிகுந்த அத்தீய சரக்குகளை ஏற்றிக் கொண்டு, மனம் எனும் தோணி கொந்தளிப்பான அலைகள் மிக்க வாழ்க்கைப் பெருங்கடலில் சென்று கொண்டுள்ளது. ஆனால் அந்தோ! அது அறியாமை (மதன்) என்னும் பாறையின் மீது மோதிக் கவிழ்ந்து விடுமோ என்னும் நிலையில் இடர்பட்டுக் கொண்டு இருக்கிறது 'கவிழ்ந்து விடுமாயின், இறைவனே யான் உன்னை அறிந்து கொள்ளுதல் இயலாது. ஆதலின் இப்போதே உன்னை வழிபடும் நல்லுணர்வை எனக்குக் கொடுத்து

அருள்வாயாக!' என திருநாவுக்கரசர் இறைவனை வேண்டிக் கொள்கிறார்.

''மனம்எனும் தோணி பற்றி
மதிஎனும் கோலை ஊன்றிச்
சினம்எனும் சரக்கை ஏற்றிச்
செறிகடல் ஓடும் போது
மதன்எனும் பாறை தாக்கி
மறியும்போது அறிய ஒண்ணாது ;
உனையுனும் உணர்வை நல்காய்
ஒற்றியூர் உடைய கோவே"

உள்ளமாகிய வயலில், மெய்மை அல்லது உண்மை என்னும் உழவைச் செய்து, விருப்பம் அல்லது அன்பு என்னும் வித்தை விதைத்தல் வேண்டும்: அதில் பொய்மை முதலிய குற்றங்கள் தோன்றாதபடி களை எடுத்தல் வேண்டும். பொறுமை என்னும் நீரைப் பாய்ச்சுதல் வேண்டும். புறப் பொருள்களை நோக்காமல் தம்மைத் தாமே அகமுக நாட்டத்தால் உள்நோக்கிக் காணுதல் வேண்டும். உள்ளமாகிய வயலில் அன்பாகிய விதை விதைத்து வளர்த்த ஞானமாகிய பயிருக்குத் தகவு அல்லது தருமம் எனும் வேலியிடுதல் வேண்டும். இத்தகைய செம்மையான நெறியில் நின்று ஒழுகினால் இறைவனடி என்னும் மேலான பயன் விளைந்து நலம் பயக்கும். இதனை'

'' மெய்ம்மையாம் உழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்மையாம் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சித்
தம்மைஉள் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலி யிட்டுச்
செம்மையுள் நிற்பர் ஆகிற்
சிவகதி விளையும் அன்றே''

என வரும் திருப்பாடலில் திருநாவுக்கரசர் மனித உள்ளத்தை எப்படியெல்லாம் ஒருநிலைப்படுத்தி சீராக வைத்தால் இறைவனை அடைய முடியும் என்பதை இப்பாடலில் விளக்குகிறார். இறைவனை அடைதல் என்பதுகூட முக்கியமல்ல, நல்ல முறையில் வாழ, வாழ்ந்து நலம் பெற மற்றவர்க்கு வழிகாட்டியாக இருக்க தன்னை எப்படியெல்லாம், தன் மனத்தை எப்படியெல்லாம் இறுத்தி வைத்தல் வேண்டும் என்பதே ஆன்றோர்கள் எடுத்துக் கூறியதாகும்.

## பட்டினத்தார் :

நம்முடைய மனம் ஒரு சிறந்த அற்புதமான கருவி; மிகவும் புனிதம் வாய்ந்தது. நாம் நம் மனத்தைப் பயன்படுத்துவதற்கு ஏற்ப அஃது உயர்ந்ததாகவோ, இழிந்ததாகவோ அமைகின்றது. நமது மனம் ஒரு சிறந்த மாளிகையாக விளங்கத் தக்கது. அதனை நாம் ஒரு அசுத்தமான தொழுவம் அல்லது சகதி நிறைந்த மாட்டுக் கொட்டிலாகச் செய்து விட்டிருக்கின்றோம். அங்கே காமம், வெகுளி, ஆசை முதலிய அழுக்குக் குப்பைகள், நீண்ட காலமாக நிரம்பிக் கிடக்கின்றன. மனமாகிய மாளிகையைத் தொழுவமாக மாற்றி அங்கே மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகள் ஆகிய கருமை நிறம் பொருந்திய எருமைக் கடாக்களைக் கட்டி வைத்திருக்கின்றோம். அத்தொழுவம் மிகவும் இருள் படர்ந்து மயங்கிக் கிடக்கின்றது. கால் வைக்க முடியாத சகதியாக, அதன் தரையோ அசுத்தம் நிறைந்தது தீ நாற்றம் மிகுந்து காணப்படுகின்றது.

பட்டினத்தடிகள், மனமாகிய மாளிகை, பராமரிப்பு இன்றி பாழ்பட்டு பாழுறையாய்த் தொழுவமாகப் பழுதடைந்து கிடத்தலைக் காண்கின்றார். மிகவும் வருந்துகின்றார். அதனைத் தூய்மைப்படுத்த முனைகின்

றார். காமம், வெகுளி, ஆசை ஆகிய குப்பைகளையெல் லாம் அரிதின் முயன்று போக்குகின்றார். ஐம்பொறி களாகிய ஐந்து கடாக்களையும் அவிழ்த்து ஓட்டி அகற்றி விடுகின்றார். அன்பு கொண்டு மெழுகி அங்கே இருந்த மேடு பள்ளங்களைப் போக்கித் துப்புரவு செய்கின்றார்: அருளுணர்வு என்னும் ஒளிவிளக்கை ஏற்றி வைத்து அறியாமை என்னும் விதானம் விரித்துப் பரப்பி, அப் பாழறையைத் துப்புரவு ஆக்கி அழகு செய்து பரிசுத்தப் படுத்துகின்றார். பள்ளியறைபோல் அங்கே ஒரு நல்ல குடும்பத்தினைப் பாதுகாப்புக்காக அமைத்து வைக்கக் கருதுகின்றார். ஒரு சிறந்த கணவனையும் மனைவி யையும் குடும்பமாக இருந்து வாழுமாறு செய்ய விரும்பு கின்றார்.

மனமாகிய மாளிகையில், உள்ளமாகிய பள்ளி யறையில் இதயக் கமலம் என்னும் செழுமலப் பூச்சூடிய கட்டில் ஒன்றைக் கொணர்ந்து இடுகின்றார், அக் கட்டிலின் கண், இமயக் கொழுந்து ஆகிய சக்தியையும் உடன் அழைத்துக் கொண்டு எழுந்தருளி குடும்பம் அமைத்துக் குடியிருந்து வாழ்ந்து வருதல் வேண்டும் என்று சிவபெருமானைப் பட்டினத்தடிகள் வேண்டிக் கொள்கின்றார்.

**"கருமுதல் தொடங்கிப் பெருநாள் எல்லாம்**
**காமம் வெகுளி கழிபெரும் பொய்எனும்**
**தூய்மையில் குப்பை தொலைவின்றிக் கிடந்ததை**
**அரிதின் இகழ்ந்து போக்கி ; பொருதிறல்**
**மையிருள் நிறத்து மதனுடை யடுசினத்து**
**ஐவகை கடாவும் யாப்பவிழ்த்து அகற்றி ;**
**அன்புகொடு மெழுகி ; அருள்விளக்கு ஏற்றி ;**
**துன்ப இருளைத் துரந்து ; முன்புற**
**மெய்எனும் விதானம் விரித்து ; நொய்ய**
**கீழ்மையிற் றொடர்ந்து கிடந்தஎன் சிந்தைப்**
**பாழறை உனக்குப் பள்ளியறை ஆக்கி ;**

சிந்தைத் தாமரைச் செழுமலர்ப் பூந்தவிசு
எந்தைநீ இருக்க இட்டனன் ; நின்
செல்வச் சிலம்பு மெல்லென மிழற்ற
அமையாக் காட்சி இமையக்
கொழுந் தையும்உடனே கொண்டிங்கு
எழுந்தரு ளத்தகும் எம்பெரு மானே"

இறைவனே இல்லறம் நடத்தும் வகையில் இதயம் தூய்மை பெற வேண்டும் என்பதே பட்டினத்தடிகள் எண்ணம்.

## தாயுமானவர் :

எல்லாச் சமயத்தவரும் இனிது உவந்து ஏற்கும் வண்ணம், இறைவனின் உண்மை இயல்பினை எடுத்து விளக்கும் முறையில், தாயுமானவர் அருளிச் செய்த இறை வணக்கப் பாடல்கள் அமைந்துள்ளன.

அங்கிங்கு எனாதபடி எங்கும்பிர காசமாய்
ஆனந்த பூர்த்தியாகி;
அருளொடு நிறைந்ததுஎது ? தன்னருள் வெளிக்குளே
அகிலாண்ட கோடியெல்லாம்
தங்கும்படி இச்சைவைத்து உயிர்க்கு உயிராய்த்
தழைத்தது எது? மனவாக்கினில்
தட்டாமல் நின்றதெது ? சமயகோடிகள் எலாந்
தந்தெய்வம் எம்தெய்வம் என்று
எங்குந் தொடர்ந்துஎதிர் வழக்கிடவும் நின்றதுஎது ?
எங்கணும் பெரு வழக்கால்
யாதினும் வல்லவொரு சித்தாகி; இன்பமாய்
என்றைக்கும் உள்ளதுஎது ? மேல்
கங்குல்பகல் அறநின்ற எல்லைஉளது எது ? அது
கருத்திற்கு இசைந்தது; அதுவே
கண்டனஎலாம் மோன உருவெளிய தாகவும்
கருதி அஞ்சலி செய்குவோம் !

என வரும் தாயுமானவர் பாடல், கடவுளின் இயல்பினை, எம்மதத்தவரும் சம்மதம் என்று ஏற்றுக் கொள்ளும் வகையில் எல்லார்க்கும் பொதுமையான நிலையில் சமரச ஞான நோக்கத்துடன், பாடப் பெற்றிருக்கக் காணலாம்.

பூவிலுள்ள தேனை அருந்தச் செல்லும் வண்டு தேனை அருந்தும் வரையில் ரீங்காரம் இட்டுக் கொண்டு இருக்கும். தேனை அருந்த ஆரம்பித்ததும் ரீங்காரம் இடுவது நின்றுவிடும். மனம் நேராகச் சொரூபத்தை அனுபவிக்கும் பொழுது பேசாத பெருநிலையில் இருக்கிறது. சொரூபத்தை அறியாத மனது அலைந்து திரிகிறது. சொரூபத்தில் நிலைத்திராத மனம் பேச்சிலும், செயலிலும் நம்மை உந்தித் தள்ளி அலைய வைக்கிறது. நம்முடைய உண்மையான சொரூபம் ஆத்ம சொரூபம் ஆகும். அதுதான் 'நாம்' என்று அறியாது அலைந்து திரிகின்றோம். குரு அல்லது படிப்பினை நமக்கு உண்மையான சொரூபத்தை (உருவத்தை) காட்டித் தருகிறது. படிப்பினை காட்டித் தந்த உருவத்தை நேராக அனுபவிக்கத் தெரியாதவர்கள் வாய்ப் பேசி அலைந்து திரிவதில் பயனில்லை. வாய்ப் பேச்சினால் படிப்பினை காட்டித் தந்த பேரழகு வாய்ந்த மௌன நிலை விளங்காது.

**நேராய்அம் மௌனநிலை நில்லாமல், வாய்பேசி**
**ஆராய் அலைந்தீர்நீர்; ஆ கெடுவீர்;—தேரீர்**
**திரைஉந்து இரையும்நதிச் சென்னியனை நாவால்**
**கரையும்; கரையும் மனக்கல்.**

சொரூபத்தை உணராது உலக சுகத்தில் மயங்கிக் காலத்தைக் களிப்பவர்கள் வாழ்நாளை வீணாக்கு கின்றனர். அவர்கள் காயத்தையும், வாக்கையும், மனத்தையும் கெட்டுப் போவதற்கே பயன்படுத்து

கின்றனர். உலக மக்களைப் பற்றி தாயுமானவர் மனம் வருந்தி குரு காட்டிய மௌன நிலையை அடையாது, போக வாழ்வில் ஈடுபட்டுக் கெட்டுப் போகின்றீர்களே என்ற கருத்தை "ஆகெடுவீர்" என்று குறிப்பிடுகின்றார்.

## இராமலிங்க அடிகளார் :

உலகத்தில் தீய துன்மார்க்கங்கள் கெட்டு, தூய சன்மார்க்க ஒழுக்கம் ஓங்கி வளர்தல் வேண்டும் என்று வள்ளலார் பெரிதும் பாடுபட்டருளினார். மக்களின் மனத்தே நன்கு இனிது பதியும் வண்ணம் பற்பல அறிவுரைகளையும், அருளுரைகளையும் வழங்கினார். அவர் தம் பாடல்கள் ஒவ்வொன்றும், மக்களின் குற்றங் குறைகளை எடுத்துக் காட்டுவதோடு அவர்களை உய்க்கும் நலம் நிரம்பித் திகழ்கின்றது.

மக்களிடையில் எத்தகைய பேதமும் இருத்தல் கூடாது. அவர்கள் அனைவரும் பேதமின்றி அன்பினால் ஒன்றுபட்டு இன்புறுதல் வேண்டும். எவ்வுயிர்க்கும் தீங்கு நேர்தல் கூடாது. எல்லா உயிர்களும் துன்பமின்றி இன்பமுற்று வாழ்தல்வேண்டும். எவ்வுயிரையும் தம்முயிர் போல் எண்ணி, மக்கள் சீவகாருண்யம் என்னும் செந்தன்மை நெறியைக் கடைப்பிடித்து ஒழுகுதல் வேண்டும். கொலையும் புலையுமாகிய குற்றங்களைச் செய்யாமல், மக்கள் அனைவருமே ஆன்மநேய ஒருமைப் பாட்டு உரிமை உணர்வு உடையவர்களாய், ஜீவகாருண்யம் என்னும் செந்தன்மை நெறியைக் கடைப் பிடித்து ஒழுகுதல் வேண்டும். உலகியல் களியாட்டங்களில் மயங்கி மாய்ந்து போகாமல் இறையருள் உணர்வோடு மக்களெல்லாம் ஒத்த உரிமையுடையவர்களாய் உவந்து வாழ்தல் வேண்டும் என்று இராமலிங்க வள்ளலார் தமது

பாடல்களிலெல்லாம் இடைவிடாது அறிவுறுத்தியுள்ளார். இதன் பொருட்டே அவர் சமரச சன்மார்க்கம் என்னும் சான்றாண்மை நன்நெறி இயக்கத்தைத் தகவுறத் தோற்றுவித்தார்.

"எத்துணையும் பேதமுறாது, எவ்வுயிரும்
தம்முயிர் போல் எண்ணி, உள்ளே
ஒத்துரிமை யுடையவராய் உவக்கின்றார்
யாவர் ; அவர்உளம்தான், சுத்த
சித்துருவாய் எம்பெருமான் நடம்புரியும்
இடமெனநான் தேர்ந்தேன் ; அந்த
வித்தகர்தம் அடிக்கு ஏவல்புரிந்திட, என்
சிந்தைமிக விழைந்த தாலோ !"

"உலகர் அனைவரையும் சகத்தே திருத்திச் சன்மார்க்க சங்கத்து அடைவித்திட எனை இந்த யுகத்தே இறைவன் வருவிக்க உற்றேன்" என்று மிகத் தெளிவாக அடிகளார் அறிவுறுத்தியிருத்தல் நாம் போற்றத் தக்கதாகும்.

இராமலிங்க அடிகள் "வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன்" என்று தம்மைக் குறிப்பிட்டுக் கொண்டு இருத்தல் காணலாம்.

"அகத்தே கறுத்துப் புறத்துவெளுத்
திருந்த வுலக ரனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்க
சங்கத் தடைவித் திடஅவரும்
இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்ந்
திடுதற் கென்றே, எனைஇந்த
உகத்தே இறைவன் வருவிக்க
வுற்றேன் அருளைப் பெற்றேனே !"

அன்பும் அறிவும் மக்களிடை குறைந்திடும் போது அங்கே ஒரு ஆசிரியர் தோன்றுகிறார். அவர் மூலம் பல நல்ல குணங்களும், உணர்வுகளும் போதிக்கப்படுகிறது. இப்படிப் பல நேரங்களில் இந்த உலகம் காப்பாற்றப் பட்டுள்ளது. இந்தக் கருத்து நமது புராணங்களில் கூட காண முடியும்.

இராமலிங்க அடிகள் அறநெறியின் சிறப்பையும் உண்மையே இறைவன் என்கின்ற அழுத்தமான கொள்கை யிலும் தீவிரமானவர். தமிழ் மொழிக்கே உரிய இனிமை, எளிமை, உருக்கம், தெளிவு, தெய்விகம் எனும் சிறப்பியல்புகள் அவர் அருளிய திருவருட்பா என்னும் கருவூலத்தில் ஒழுங்கு கலந்து நிரம்பித் திகழ்கின்றன.

## இராமகிருஷ்ண பரமஹம்சர் :

இந்து மதத்தை உலகுக்கு எடுத்துக் காட்டிய பெருமை சுவாமி விவேகானந்தர் அவர்களைச் சாரும். வீர புருஷர் விவேகானந்தர், சிகாகோவில் நடந்த உலக சமய மாநாட்டில், அனைத்து அறிஞர்களின் உள்ளங்களைக் கொள்ளை கொள்ளும் வகையில் இந்து சமயத்தைப் பற்றி எடுத்து உணர்த்தினார். அவர்களால் நிறுவியது இராமகிருஷ்ணா பணி மன்றம்(இராமகிருஷ்ணா மிஷின்) ஆகும். சுவாமி விவேகானந்தருடைய குரு, முனிவர் இராமகிருஷ்ண பரமஹம்சர் ஆவார்.

உலகில் எல்லா சமயங்களும் தாயைக் கண் கண்ட தெய்வமாக பேசுகின்றன. 'தாயிற் சிறந்தொரு கோயிலுமில்லை' என்பது நாம் அறிவோம். நிலத்தைத் தாயாக வணங்குகிறோம். நதிகளையும் ஆறுகளையும் பெண் தெய்வங்களாகப் போற்றி வணங்குகிறோம். நமது நதிகளுக்குக் கங்கை, காவிரி, யமுனா, கோதாவரி நர்மதா என்று பெண்கள் பெயர்களைச் சூட்டி

வணங்குகிறோம்.

'பேணுதற் பொருட்டுப் பெண்ணெனப் பட்டாள்' என்ற கூற்றிற்கேற்ப, இந்த நதிகள் மக்களைப் பேணிக் காத்து பெண் தெய்வமாகத் திகழ்வது சாலப் பொருத்தமே. இயற்கையின் வளமும், வனப்பும் அன்னையின் அருள் தோற்றங்களே. அவைகளை லட்சுமி, சரசுவதி, பார்வதி என்று பெயர் சூட்டி வணங்குகிறோம். அதே நேரத்தில் அவளது சீற்றம், உக்ரம் ஆகிய எழில் தோற்றங்களைக் காளி என்றும் துர்க்கை என்றும் மாகாளி எனவும் போற்றி வணங்குகிறோம்.

இராமகிருஷ்ணர், அன்னையின் அருட்பேறு பெற்று தமது ஆன்மீக வாழ்க்கையைத் தொடர்ந்தார். இந்து சமயத்தையே புதுப் பொலிவையும், எழுச்சியையும், மறு மலர்ச்சியையும் தமது சீடர் விவேகானந்தர் மூலம் வரும்படி செய்தவர்.

இராமகிருஷ்ணர் தன்னுடைய சீடர்களுக்குச் சொன்னது சாக்கடை ஒன்று கங்கையில் சேரும் இடத்தில் இருந்தது. சாக்கடைக்கு எதிர்க்கரையில் சில நாய்கள் பிணத்தைப் புசிப்பதில் இன்புற்று மௌனமாக இருந்தன. சாக்கடையைக் கடந்து பிணம் இருக்கும் இடத்திற்கு செல்ல முடியாத எதிர்க்கரையில் இருக்கும் சில நாய்கள் புசிக்கின்ற நாய்களைப் பார்த்துக் குரைத்துக் கொண்டிருந்தன. இக்காட்சிகளைத் தம் சீடர்களுக்குக் காட்டி மௌன நிலை எத்தகையது என்பதை விளக்கினார்.

புசித்து இன்புற்றிருந்த நாய்களுக்குக் குரைக்க வேண்டிய அவசியம் இல்லை. புசிக்க முடியாத நாய்கள் வெறுமனே கத்திக் கலவரப் படுத்திக் கொண்டிருந்தன. பரம்பொருளை அனுபவிக்க முடியாதவர்கள் தங்களை யாரென்று அறியாமல் வெறும் வாய்ப் பேச்சு பேசி அலைந்து திரிகின்றார்கள்.

காட்டில் விறகு வெட்டி விற்கும் ஒருவனைக் கண்ட சாது ஒருவர், "அப்பனே நீ உள் நோக்கிப் போ" என்று கூறி விட்டுச் செல்கிறார். இதைக் கேட்ட விறகு வெட்டி காட்டினுள் மேலும் உள்நோக்கிச் செல்கிறான், சந்தனக் கட்டைகள் கிடைத்தன. மேலும் உள்ளே செல்கிறான், தாமிரக் கட்டிகள், மேலும் செல்கிறான். வெள்ளிக் கட்டிகள், தங்கம், வைரம் முதலியன கிடைத்தன. இது அவரது கதைகளில் ஒன்று.

மனிதன் தனது மனத்தினுள் உள்நோக்கிச் செல்லும் அளவுக்கு அரிய பொருள்களைப் பெறுகிறான் என்பதும், உணர்வினைப் புறத்தே செலுத்தாமல் அகத்தே செலுத்தி னால் தான் மனிதன் இறைவனை உணர முடியும் என்பதும் தான் இராமகிருஷ்ணரின் கருத்தாகும்.

# 11. நாளும் நேரமும்

எல்லாம் வல்ல இறைவனால் உருவாக்கப்பட்ட இரவு பகலை வைத்துக் கொண்டு, மனித வாழ்க்கைக்கு உதவும் வகையில் நேரமும், நாளும், வாரமும், மாதமும், வருடங்களும் ஏற்படுத்திக் கொண்டான் மனிதன். ஆனால் ஏனோ தெரியவில்லை அதில் நேரங்களில் சில நேரங்களையும், நாட்களில் சில நாட்களையும் நல்லவைகள் என்றும்; சில நேரங்களையும் சில நாட்களையும் தீயவைகள் என்றும் நிர்ணயித்துக்கொண்டான். ஏன் என்று யாருக்கும் புரியாது. 'இறைவனே உருவாக்கியது இந்த உலகம்' என்று அழுத்தமாக நம்புகிறவன்— இந்த உலகில் உழல்கின்றவனுக்கு எப்படி இந்த நேரம் சரியில்லையென்றும், இந்த நாள் சரியில்லையென்றும் தெரிந்தது. பல காலம் மனித வாழ்வின் அனுபவத்தின் காரணமாக இவைகளைத் தெரிந்து கொண்டு நிர்ணயித்தான் என்றும் சொல்லலாம். ஆனால் இது எல்லாருக்கும் எப்படிப் பொருந்தும்? ஒவ்வொரு மனிதன் ஒவ்வொரு நேரத்தில் பிறந்தவர்கள். அவரவர் பிறப்பின் பயன் அவரவர்க்குப் பயன்படும் என்றும் சொல்கின்றனர். அப்படி சொல்லும் போது அனைவர்க்கும் பொதுவாக சில நேரங்கள் எப்படி நல்லதாகவும், தீயதாகவும் இருக்க முடியும்? எல்லாமே இறைவன் செயல் என்று சொல்லி சில காரியங்களுக்கு முற்றுப்புள்ளி வைத்து விடும் பெரியவர்கள், ஏன் நாளும்

நேரமும் சரியில்லை என்றும் அதனால் தான் இப்படியாகி விட்டது என்றும் பிறர் மீது பழி போடுகிறார்கள்.

எல்லாமே இறைவன் செயல் என்ற பின், இராகு காலம்— எமகண்டம் ஏன்? ஒரு நாளில் ஒன்னரை மணி நேரம் மட்டும் தீய நாள் என்று நிர்ணயிப்பது வேடிக்கை யாக இருக்கிறதல்லவா?

அதுமட்டுமல்ல, அது எல்லோருக்கும் பொருந்தும் என்பது எப்படி? அவரவர் பிறந்த நேரம் அவரவருக்கு பலன் பெறுவதில் காரணமாக இருக்கும் என்று நிர்ண யித்தபின் எப்படி அனைவருக்கும் தீய நேரம் பொருந்து கிறது?

ஒருவன் செய்ய வேண்டிய காரியத்துக்குத் தடையாக, செல்ல வேண்டிய இடத்துக்கு இடையூறாக பல நிகழ்ச்சி கள். இந்த நாளும் நேரமும் குறுக்கீடாகி பலவிதத் தடைகள் ஏற்பட்டு அதனால் பலருக்குப் பல நேரங்களில் பிரச்சனையாகி விடுகிறது.

மனித வாழ்க்கையில் மனிதனை சுதந்திரமாக வாழ விடாமல், தன் முயற்சியினால் செய்ய வேண்டிய பல காரியங்களை செய்ய இயலாமல் செய்து விடுகிறது; நாமே உருவாக்கிய நாளும் கிழமையும்!

பத்து மணிக்கு ஒரு இடத்துக்கு முக்கிய வேலை நிமித்தம் செல்ல வேண்டும் என்றால் அந்த நேரம் நன்றாக இல்லை என்பதால் ஒரு மணி நேரம் முன்பே செல்வது. ஆனாலும் அந்த வேலை பத்து மணிக்குத்தான் நடை பெறுகிறது! தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளு கிறான். 'ஒன்பது மணிக்கெல்லாம் கிளம்பி விட்டேன்' என்று சொல்லிக்கொண்டு மகிழ்ச்சி அடைகிறான். இது தேவைதானா? எத்தனை மணிக்குக் கிளம்பினால் என்ன? எத்தனை மணிகளைத் தவிர்த்தால் என்ன? நடக்க வேண்டிய காரியங்கள் நடக்க வேண்டிய நேரத்தில்

நடக்கும் என்று பொதுவாக ஒரு எண்ணம் இருக்கும் போது யார் எதைத் தடுக்க முடியும்.

இவைகளைச் சிந்திக்க வேண்டும் இவைகள் எல்லாம் தேவையற்றது என்பது மட்டுமே கருத வேண்டும். சரியான முயற்சியும்— நியாயமான கடமையுணர்வும் நாம் நம்மில் வளர்த்துக் கொள்ள வேண்டும்.

இராசிகளும், நட்சத்திரப் பலன்களும் கூட அப்படித் தான். கோடிக்கணக்கானவர்களுக்கு ஒரே ராசியும் ஒரே நட்சத்திரமும் அமைந்து விடுகிறது. பனிரெண்டு ராசி களும், இருபத்தேழு நட்சத்திரங்களிலேயே அனைவரை யும் அடக்கி விடுகிறோம். ஆனால் நடப்பது என்ன? அனைவருக்குமே அந்த ராசியின் பலன்களோ, நட்சத் திரத்தின் பலன்களோ கிட்டுவதில்லை. ஒரே ராசியில் பிறந்தார்க்குக் கூட ஒரே மாதிரிப் பலன்கள் கிட்டுவ தில்லை ஒவ்வொரு ராசிக்கும் மூன்று நட்சத்திரப் பலன்கள் என்று வகுத்துள்ளார்கள். அப்படிப் பார்த் தாலும் அது ஒரே மாதிரி அமைவதில்லை.

தினம், வாரம், மாதம், வருடம் எனப் பலவித இதழ் களைப் பார்த்தால் ராசிப் பலன்கள் பல நிபுணர்களால் வகுத்துக் கொடுக்கப் படுகிறது. இவைகளை யெல்லாம் தொடர்ந்து பார்த்து பின்பற்றுபவர்கள் கூட ஒவ்வொரு இதழில் தன் ராசியையோ, நட்சத்திரப் பலன்களையோ பார்க்கும்போது கூட அவைகள் ஒவ்வொரு இதழின் கணக்கு வேறுபடுகிறது. ஒரு இதழில் 'நலம்' என்று இருந் தால் அதற்கு நேர்மாறாக மற்றொரு இதழில் 'தீமை' என்று இருக்கிறது. எல்லா இதழ்களிலுமே மிகச் சிறந்த சோதிட நிபுணர்களால் கணக்கிட்டு வெளியிடுகிறார்கள். இருப்பினும் ஏன் ஒவ்வொன்றும் வெவ்வேறாக எழுதப் படுகிறது. கேட்டால் சரியான பதில் வராது. இன்றைக்கு

ஒரு ராசிக்கு ஒரு பலன் என்றால் அனைவர்க்கும் இன்றைக்கு அந்த ராசிக்கு அதே பலன் தானே வர வேண்டும்? ஏன் மாறுபடுகிறது— வேறுபடுகிறது. உலக மக்கள் அத்தனைப் பேருக்கும் ஒன்றாக வராதது தற்குக் காரணம் அவரவர் பிறந்த நாள், நேரம். அது மட்டுமல்ல அவரவர் போன ஜென்மத்தில் செய்த கர்மம் என்றும சொல்வார்கள்.

அவரவர் செய்துள்ள கர்ம பலன் என்றால் இவைகள் எல்லாம் எதற்கு? யார் கர்மத்தை யார் நிர்ணயிக்க முடியும் இதற்கு சாந்தி ஏன்? பரிகாரம் ஏன்? அவை களால் எப்படி தனி மனிதனின் வாழ்க்கை நிலையை மாற்ற முடியும்? எண்ணிப் பார்க்க வேண்டும். நேரத்தை வீணாக்கத் தேவையில்லையே.

'எல்லாம் நமது கையில் இல்லை; இறைவன் கையில் தான்' என்பார்கள். அப்படியென்றால் இறைவனை யன்றோ கேட்க வேண்டும், முறையிட வேண்டும். உண்மை அது தானே? அதனால் தான் 'உண்மையே இறைவன்' என்பதை அனைவருமே நன்கு புரிந்து கொள்ள வேண்டும். தேவையற்ற சிந்தனையில் தனது நேரத்தையும் வீணாக்கத் தேவையில்லை.

இது போன்ற நிலைகளைச் சமாளிக்கத்தான் எல்லாம் நன்மைக்கே என்பர். அது பல நேரங்களில் உண்மையும் கூட. பொதுவாக ஏதேனும் தீங்கு ஏற்பட்டாலும், தடை ஏற்பட்டாலும் நட்டம் ஏற்பட்டாலும் மரணம் ஏற்பட்டாலும் பெரியவர்கள், ஆன்றோர்கள்—ஞானிகள் 'எல்லாம் நன்மைக்கே' என்று சொல்வதுண்டு. அது கேட்டு இழப்பால் இதய சுமையோடு உள்ளவர்கள் வேதனைப்படுவதும் உண்டு. எருது புண் காக்கைக்கு என்ன தெரியும்? என்று எண்ணி துடிப்பதும் உண்டு. ஆனால் அதில் உண்மையும் உண்டு.

ஒரு காட்டில் வேட்டையாட மன்னனும், மந்திரியும் சென்றார்கள். நடுக்காட்டில் ஒரு பாழடைந்த கிணற்றுக் கரையில் அமர்ந்து இளைப்பாறிக் கொண்டு இருந்த நேரத்தில், மன்னன் தனது கத்தியினால் இலைகளை வெட்டிக் கொண்டிருந்தான். எதிர்பாராத விதமாக மன்னனின் கட்டை விரலில் பலத்த அடிபட்டு இரத்தம் கொட்டியது. உடனே மந்திரி அங்கிருந்த இலைகளை கசக்கிப் பிழிந்து மன்னன் கட்டை விரலுக்கு மருந்திட்டு கட்டுப் போட்டு ரத்தம் வழிவதை நிறுத்தினான். வேட்டையாட வந்த இடத்தில் இப்படி ஒரு நிலை மன்ன னுக்கு ஏற்பட்டதையெண்ணி மன்னன் வெகுவாக மனம் நொந்தான். மந்திரி மன்னனைச் சமாதானப்படுத்தி 'எல்லாம் நன்மைக்கே' என்றான். உடனே மன்னனுக்கு கோபம் வந்து 'என் வேதனை உமக்கு நன்மையாகத் தெரிகிறதா ?' என்றான்.

உடனே மந்திரி 'என் மீது கோபப்படாதீர், நான் உண்மையையே சொல்கிறேன்' என்று மீண்டும் 'எல்லாம் நன்மைக்கே' என்றான். மன்னன் மிகவும் ஆத்திரமாக மந்திரியை பாழடைந்த கிணற்றில் தள்ளி விட்டு, 'இது கூட நன்மைக்கே' என்று கேலி பேசிவிட்டு அங்கிருந்து கிளம்பினான்.

மன்னன் சிறிது தூரம் சென்றதும் திடீர் என்று எங்கிருந்தோ பத்து பதினைந்து காட்டு மனிதர்கள் அங்கு வந்து மன்னனைச் சூழ்ந்து கொண்டு ஒரு கயிற்றால் மன்னனைக் கட்டி அழைத்துச் சென்றனர். மன்னனுக்கு என்ன செய்வது என்று புரியவில்லை. துணைக்கு மந்திரி கூட இல்லை; அவர்களோ காட்டு மனிதர்கள்.

அவர்கள் வழிபடும் ஒரு தேவதைக் கோயிலுக்கு இழுத்துச் சென்றனர். அங்கே அந்த தேவதைக்கு மன்னனை பலியிட ஆயத்தம் ஆனார்கள். மன்னனுக்குத் தன்னை யார் என்று சொல்லிக் கொண்டாலும் பயன்

இல்லை. மன்னனின் இரண்டு கைகளையும் பின்புறத்தில் கட்டினார்கள்— பலியிடத் தயாரானார்கள்— மன்னன் தலையைத் தாழ்த்தி கையில் கட்டை விரல் பகுதியில் ஒரு கட்டு இருப்பதைக் கண்டார்கள். முதலிலேயே அடிபட்டு ரத்தம் கொட்டியுள்ளதைக் கண்டதும் பலியிடுவதை நிறுத்திக் கொண்டார்கள்.

தேவதைக்கு பலியிடும் எந்த உயிரும் அடிபட்டதாக இருக்கக்கூடாது என்பது அவர்கள் மரபு. உடனே அவர்கள் தலைவனிடம் அதைப் பற்றிச் சொன்னார்கள். அவனும் இந்த ஆள் தேவதைக்கு பலியிடத் தகுதி யானவன் இல்லை என்று அவனை அனுப்பி விட உத்தரவு இட்டான். அதைக் கேட்டதும் மன்னனை விடுவித்து விட்டார்கள். பெரு மகிழ்ச்சியில் உயிர் பிழைத்தோம் என்று எண்ணிக் கொண்டே மந்திரியைத் தேடி வந்தான் மன்னன்.

மந்திரி பாழடைந்த கிணற்றிலேயே அமைதியாக ஒரு மூலையில் அமர்ந்து இருந்தான் மன்னன் அங்கு வந்து 'அமைச்சரே' என்று அழைத்து, மந்திரியை வெளியே வர உதவினான். மந்திரியும் மெதுவாக வெளியே வந்தான். மந்திரியைப் பார்த்து "என்னை மன்னிக்கவும். உங்களை கோபத்தில் கிணற்றில் தள்ளி விட்டேன் என்றும், நீங்கள் சொன்னபடி என் கையில் அடிபட்டதால் தான் என் உயிர் பிழைத்தது" என்று நடந்தகதையைச் சொன்னான்.

மேலும் மன்னனுக்கு ஒரு சந்தேகம், 'எனக்கு அடி பட்டது; அதுவே எனக்கு நன்மையாகி விட்டது. நான் உங்களை கிணற்றில் தள்ளிய பிறகும் நீங்கள் 'எல்லாம் நன்மைக்கே' என்று சொன்னீர்களே அது எப்படி? என்று கேட்டான்.

மந்திரி சிரித்துக் கொண்டே சொன்னான்: 'இது புரிய வில்லையா? நானும் உங்களோடு இருந்திருந்தால் உங்கள்

கட்டை விரல் தானே அடிபட்டது. நான் நன்றாக இருக்கிறேன் என்று என்னையல்லவா பலியிட்டு இருப் பார்கள் என்றான்.

அப்போது தான் புரிந்தது மன்னனுக்கு. ஒவ்வொரு காரியத்துக்கும் ஒவ்வொரு காரணம் உண்டு. 'எல்லாம் நன்மைக்கே' என்பதில் ஒரு மிகப் பெரிய உண்மை யுள்ளது.

பொதுவாக இது போன்ற கதைகள் தோல்வி நேரத்தில் துவண்டு விடக்கூடாது என்பதற்காகவே சொல்லப்படுகிறது. "முயற்சியுடையார் இகழ்ச்சியடை யார்' என்று சொல்வது முற்றிலும் உண்மையே.

தேவையற்றவைகளுக்காக அஞ்சுவதும், நாளும் கிழமையும் கண்டு சோர்வதும் கூடாது.

# 12. முயன்றால் வெற்றி பெறலாம்

தன்னடக்கம் கற்றுக்கொள்ளுங்கள்; நீங்கள் மேலும் உயர்ந்து விடுவீர்கள்.

தன்னைப் பற்றி மற்றவர்கள் தானே உணர்ந்து கொள்ளுமாறு செய்யுங்கள்.

குற்றத்தை மறைப்பதற்கு முயற்சி செய்யாமல், நேருக்கு நேராக எதிர்த்து நில்லுங்கள்.

இனிய பேச்சுக்களால் எதிர் வழக்காடத் தேவையில்லை; உங்கள் சக்திகளைப் பற்றிக் கூட்டிக் குறைத்துப் பேசாதீர்கள்.

தன்னடக்கத்தின் உயர்வை நீங்கள் தெளிவாகக் காண்பதால், அதனை அடைவதற்கு என்ன செய்ய வேண்டும், என்பதைப் புரிந்து கொள்ளுங்கள்.'

குற்றங்களை நீக்குவதும், ஆராய்வதும், தூய்மைப் படுத்துவதும் வெற்றிக்கு வழிகோலும்.

எதிலும் கண்மூடித்தனமாகச் செயலில் இறங்காமல், இயற்கைப் பொருள்களின் வெளிப்பகட்டில் மயங்காமல், நடுநின்று இயங்கும் நெறிமுறைக்கு உட்பட்டு உங்கள் எண்ணங்களை செயல்படுத்துங்கள்.

நீங்கள் உங்கள் விருப்பம் போல் எதையும் செய்யாதீர்கள்.

எது நேர்மையானதென்று தெரிந்து, அதைச் செய்யுங்கள்.

என்றைக்கும் நிலைத்து நிற்கும் நற்செயல்களில் ஈடு படுங்கள். சூழ்நிலைக்கு ஏற்றபடி தனது இயல்பான தன்மைக்கு அடிபணியாதீர்கள்.

நீங்கள் மனத்தின் ஆற்றல்களால் இழுக்கப்பட்டு அங்கும் இங்கும் அலையாதீர்கள். அந்த ஆற்றலை நிறைவேற்றி வெற்றி பெறுங்கள்.

நீதி நெறிகளுக்கு எதிராக வரும் நினைவுகளையும் செயல்களையும் அகற்றி விடுங்கள்.

நெறிமுறையின் உதவியால் துன்பத்தையும் தோல்வி யையும் நீக்கி விடுங்கள்.

தன்னடக்கத்தின் நிறைவையும் மெய்யறிவையும் பெறும்போது இயற்கை அறிஞனைப் போலவே நீங்களும் ஓர் அறிவாளியாகின்றீர்கள்.

தன்னுயிரைப் பற்றி அறியும்போது பிற உயிர்களைப் பற்றிய அறிவும் உங்களுடன் தழுவி நிற்கும்.

தன்னடக்கம் பயிலும் நீங்கள் தீ விதிகளைக் கடந்து நல் விதிகளில் முறையாக வளர்ச்சியுற்று ஞானம் பெறு வீர்கள்.

உண்மை நிலைகளை உணர்ந்தால், இன்பமளிப்பதும் துன்பமளிப்பதும் எதுவென்று பகுத்தறிய வேண்டிய தில்லை.

ஒவ்வொரு வினைவிற்கும் காரண காரியத் தொடர்பு உண்டு என்பது அறிவியல் அறிஞர்கள் கண்டறிந்த உண்மையாகும்.

நீங்கள் தீய எண்ணங்களை எண்ணினாலும், கொடுஞ் செயல்கள் புரிந்தாலும் இமைப்பொழுதில்

உங்கள் மனம் பழுதடைகிறது. ஒரு விநாடியில் மாறி விடுகின்றீர்கள். சிறிது தீமை செய்தாலும் உங்களுக்கு மனச்சோர்வு ஏற்படுகின்றது.

தீய எண்ணங்களும் தீச்செயல்களும் தொடர்ந்து வந்தால் நீங்கள் கொடுமைக் காரணமாகி இழிந்த நிலை அடைகின்றீர்கள்.

இதற்கு நேர்மாறாக நல்ல எண்ணங்களுடன் நற்செயல்கள் புரிந்தால் உங்களுக்குப் பெருந்தன்மையும் மகிழ்ச்சியும் வந்து சேர்கின்றன. வெற்றியும் கிட்டு கின்றன.

காரண காரியம் என்னும் குற்றமற்ற நெறிமுறையில் உங்களுடைய பண்புகள் உங்களுக்கு மதிப்பையோ அல்லது அவமதிப்பையோ தருகின்றன.

உங்கள் செயல்களுக்கு ஏற்றபடிதான் உங்கள் குணமும் அமைகின்றது.

மகிழ்ச்சியும் அமைதியுமின்றித் துன்பத்தில் மூழ்கி யிருந்தால் நீங்களே அதற்குப் பொறுப்பாக வேண்டும். உங்கள் துன்பத்தின் ஊற்று உங்களுக்குள்ளேயே இருக் கின்றது, வேறெங்கும் இல்லை.

நீங்கள் மனவுறுதி பெறுவதுதான் முதல் கடமை யாகும். மனவுறுதி இல்லாமல் எதுவும் செய்ய முடியாது.

நுகர்ச்சிகளுக்கு அடிமையாக இருந்து கொண்டு, மன உறுதி பெறுதல் முடியாது.

மனத்தைப் பழக்குவதற்குரிய வழிமுறைகளெல்லாம் லாம் உங்கள் மனத்திலும் வாழ்க்கையிலுமே அடங்கி யுள்ளது.

உங்கள் குணத்தின் வலிவற்ற பகுதியில் தங்கியுள்ளன வற்றுடன் போரிட்டு வெற்றி பெற்றால் மனவுறுதிக்கு வேண்டிய வலிமையை பெறக்கூடும்.

தீய பழக்கங்களை அகற்றி, நல்ல பழக்கங்களைக் கடைப்பிடித்து, செய்யப்போகும் செயலில் விழிப்புடன் கவனத்தைச் செலுத்தி, உடனுக்குடன் ஊக்கத்துடன் செய்து, முறையான வாழ்க்கை நடத்தி, நாவடக்கத் துடன் மனத்தை அடக்கினால் மனவுறுதி பெற்று விடலாம்.

ஒரு தீய பழக்கத்திற்கு நீங்கள் இடங்கொடுப்பீர்களே யானால் உடனே அதில் கிடைக்கும் இன்பத்தில் மூழ்கி விடுகின்றீர்கள். அதனால் தன்னைத்தானே காத்துக் கொள்ளும் உரிமையையும், வலிமையையும் இழந்து அடிமையாகி விடுகின்றீர்கள்.

மனம் சுறுசுறுப்புடனும் ஊக்கத்துடனும் இருந்தால் இதனைச் செய்து முடிக்கலாம். இதனைப் பயிலும் நீங்கள் இடைவிடாமல் தன்னைத்தானே கவனித்துக் கொள்ள வேண்டும்.

நீங்கள் கடமையைச் செய்வதில் நன்கு கருத்தைச் செலுத்துங்கள். மனத்தைப் பழக்குவதில் முழு நிறைவு காணுங்கள். அரைகுறையாகச் செய்யும் செயல் வலிவின்மையைக் காட்டும்.

சின்ன வேலையாக இருந்தாலும் அதை முழு நிறை வோடும் குறிக்கோளாகக் கொள்ளுங்கள்.

மனத்தை அலையவிடாமல் ஒவ்வொரு வேலையிலும் கருத்து முழுவதையும் செலுத்தினால் ஒருமை நோக்கும் மனத் திட்பமும் படிப்படியாக வந்து சேரும்.

இத்தகைய மனம் உடைய உங்களுக்கு அமைதியும் இன்பமும் வந்து சேரும்.

உறுதியான மனமும், சோம்பலும் ஒன்று சேராது. எதையும் விருப்பம்போல் செய்வதென்றால் கால தாமதம் ஏற்படும்.

காரியத்தைத் தள்ளி வைக்கக் கூடாது அவ்வப்போது செய்ய வேண்டியதை உடனுக்குடன் செய்து முடிக்க வேண்டும். இதிலிருந்து உறுதியும், வெற்றியும், அமைதியும், பிறக்கின்றன.

தனது ஆசைகளிலும் மன உணர்ச்சிகளிலும் கண்மூடித்தனமாக மகிழ்ந்திருக்கக் கூடாது. அவற்றைக் கட்டுப்படுத்துங்கள்.

ஒரு நாளைக்கு எத்தனை உணவுகள்— அதை எப்பொழுது உண்ண வேண்டும்— எத்தனை மணிக்குப் படுக்கைக்குச் செல்ல வேண்டும்— எத்தனை மணி நேரம் தூங்க வேண்டும் என்று வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் விதிமுறைகளை ஏற்படுத்தி அவற்றை உறுதியுடன் கடைப்பிடித்து வாருங்கள். நல்லதைக் கடைப்பிடிக்கும் நீங்கள் நினைத்ததை செய்து முடிக்கும் ஆற்றல் பெற்றவராகிறீர்கள்.

சினம்— சீற்றம்— எரிச்சல் அல்லது கெட்ட எண்ணத்துடன் எதையும் பேசாதீர்கள். எண்ணிப் பார்த்துப் பேசுங்கள். அடக்கத்துடன் பேசுங்கள். அளவோடு பேசுங்கள்.

வாழ்க்கையில் தன்னடக்கம் முதன்மையாக நிற்கின்றது இந்த நெறிகளை பொறுமையுடன் கடைப்பிடித்து அவற்றை உங்களது செயல்முறைகளில் புகுத்துங்கள்.

அதனால் குற்றமில்லாத சமநிலையுடையதுமான மன வலிமையைப் பெறுவீர்கள்.

உங்களது தொழில் எதுவாக இருந்தால் என்ன? அந்தத் தொழிலைச் செய்யும்போது முழு மனதுடன் வேலை செய்து அதில் நிறைவு காணுங்கள். வேலையில் நிறைவு காண்பது முழுமையாகவும் குறைவற்றதாகவும் இருத்தல் வேண்டும்.

ஆழ்ந்து சிந்தனை செய்தல்— முழு ஆற்றலையும் பயன்படுத்துதல்— மனதை ஓயாது வேலையில் செலுத்துதல்; பொறுமையையும்— விடாமுயற்சியையும் பேணி வளர்த்தல் கடமையுணர்வு முதலியவற்றைக் கடைப்பிடியுங்கள்.

உலகத்தின் கடமைகளில் முழு நிறைவைக் காணுங்கள்.

# 13. மரணம்

மனிதன் அஞ்ச வேண்டியதற்கு அஞ்ச வேண்டும். அஞ்சத் தேவையற்றதிற்கு அஞ்சுவது தேவையில்லை. ஆனால் பொதுவாக 'மரணம்' என்னும் போது அஞ்சத் தான் செய்கின்றனர். மரணம் நிச்சயம் அனைவரையும் சந்திக்கும் முடிவு. பிறப்பு என்று இருந்தால் இறப்பு என்று ஒன்று உண்டு. எனவே தவிர்க்க முடியாத ஒரு நிகழ்ச்சிக்கு நாம் ஏன் அஞ்ச வேண்டும்? அதைப் பற்றி கவலைப்படுவதே தேவையில்லாதது. ஆனால் மரணம் என்பது எப்படி வரவேண்டும், நாம் எப்படியெல்லாம் வாழ வேண்டும், நமது முடிவுக்குப்பின் நிற்பது என்ன? என்பதைப் பற்றியாவது நிச்சயம் சிந்திக்க வேண்டும்.

புல், பூச்சி, செடி, கொடி, பறவைகள், மிருகங்கள் என்று பல பிரிவுகளில் பிறவிகள். ஆனால் மனிதப் பிறவி மட்டுமே சிந்திக்கும் ஆற்றல் பெற்றது. அனைத்துக்குமே உயிர் உண்டு. அந்த எல்லா உயிர்களுக்குமே மரணம் உண்டு அவைகள் அவற்றை உணர்வது கூட இல்லை. ஆனால் அவைகள் மரணத்திற்குப் பிறகும் மற்றவர் களுக்குப் பயன்படுவது என்னவோ உண்மை. இருக்கும் போதே பல மனிதர்கள் மற்றவர்க்குப் பயன்படுவது இல்லை! இறந்து விட்டால் யாருக்கும் எந்தவிதப் பயனும் இருப்பதில்லை. மனித மரணத்திற்குப் பின் எரிப்பதோடு, புதைப்பதோடு சரி. அவர்கள் கதை முடிந்து விடுகிறது.

எனவேதான் மனித வாழ்வின் போதே எப்படியெல்லாம் வாழ வேண்டும், எப்படியெல்லாம் வாழக்கூடாது என்று சிந்திப்பது மிக மிக அவசியம்.

"அவர் இருக்கும் போது எத்தனைபேருக்கு உதவியாக இருந்தார்— எவ்வளவு நல்லவர். எளிமையானவர்— அவரை நாடி வந்தவர்களை ஒருபோதும் கைவிட்டது இல்லை. இன்று அவர் இல்லை. அந்த இழப்பு சரிகட்ட இயலாத இழப்பு."

—இப்படியெல்லாம் சிலரைப் புகழ்கின்றோம். அவர் புகழை வாழ விட்டு அவர் மட்டும்தான் இறந்தார். அவர் இன்று இல்லை. ஆனால் அவர் புகழ் மட்டும் நிலைத்து நிற்கிறது.

"அதோ போகின்றாரே இறுதிப் பயணம்! புண்ணியவான்— மகா கஞ்சன், அவர் சாகின்ற வரைக்கும் யாருக்குமே உதவியது இல்லை. அதனால்தான் அவர் இறுதிப் பயணத்தில் கூட கூட்டம் குறைவு. அவர் இருந்தாலும் ஒன்றுதான் இறந்தாலும் ஒன்றுதான்."

—இப்படியும் சிலரைப் புகழத்தான் செய்கிறோம். நீண்ட நாட்கள் நோய்வாய்ப் பட்டு, வயதும் ஆகி, யாருக்கும் பயனற்று, இன்றோ நாளையோ என்று தினம் தினம் எதிர்பார்த்து, எதுவுமே சாப்பிடுவதில்லை. எல்லாமே படுக்கையில் தான்! இவர் இருப்பதைவிட இறப்பதே மேல் என்று ஒரு தீர்மானத்தை முன்மொழிந்து, அவர் நிலையைக் கண்டவர் அனைவருமே வழிமொழிந்து, இருந்தும் சாகாமல், அனைவரையும் சாகடித்து, சுற்றத்தார் கூட பலமுறை வந்து வந்தும் பார்த்துச் சென்றும் உயிர் ஊசலாடிக் கொண்டும் மெல்ல மெல்ல மரணம் அவரை தன் வசமாக்கிக் கொண்டது. இந்தச் செய்தி தேவையற்ற போது சாதாரண செய்தியாகி விடுகிறது. அந்த மரணத்தில் வியப்பில்லை, வீரமில்லை, யாருக்கும்

எந்த இழப்பும் இல்லை. இப்படிப்பட்ட மரணம் புகழற்றது.

மரணம் என்பது பலரை அதிர்ச்சிக்கு உள்ளாக்க வேண்டும்— பலரைத் துக்கத்தில் ஆழ்த்த வேண்டும்— நல்ல புகழினைத் தேடித்தரும் உன்னத மரணமாக இருத்தல் வேண்டும்.

அப்படி அனைவருமே புகழத்தக்க— வாழ்க்கை நெறியை தன் வாழ்நாளில் வாழ்ந்திருந்தால், அந்த மரணம்— அந்த இழப்பு ஒரு மாபெரும் இழப்பாக இருக்க முடியும்.

'மரணம்' என்கிற சொல் தான் அதிர்ச்சிக்கும் கவலைக்கும் உள்ளான சொல்லே தவிர அதைப்பற்றி கவலையற்று இருக்கும்வரை அது சாதாரண சொல்தான். மயானக் காட்டில் நுழைந்து ஒருவரைப் புதைக்கவோ, எரிக்கவோ செய்யும் போது 'எப்படியெல்லாம் வாழ்ந்தான்? கடைசியில் இந்தநிலைக்குத்தானா இத்தனை உழைப்பு? இத்தனை விதப் பதவிகள்? இவ்வளவு ஆடம்பரம்? இத்தனை தலைக்கனம்? இத்தனைப் பாடு?' என்று பலப்பல எண்ணங்களின் வெளிப்பாடு, அதற்குரிய உரையாடல்கள். ஆனால் அந்த நிகழ்ச்சியில் இருந்து வெளிப்பட்டதும் அதில் கலந்து கொண்ட அத்தனைப் பேரும் தனது கடமைகளை வெகுவேகமாக செய்யத் துணிவதையும் யாரும் அதைப் பற்றி கவலைப் படுவதாகவும் தெரிவதில்லை.

அங்கே சூழ்ந்திருந்த அத்தனைப் பேருக்கும் பலவிதமான கடமைகள். தன் பிள்ளைகள் திருமணம் பற்றி, தான் வாங்கிய கடனைப் பற்றி, தான் கொடுத்த கடனை வசூலிப்பது பற்றி, வழக்கு மன்றத்தில் நிலுவையில் உள்ள வழக்குகள் பற்றி, வேலை கிடைக்காத பிள்ளைகள் வேலை பற்றி, சிலரின் பிள்ளைகள் கல்வி பற்றி— தனது பெண்ணை நல்ல இடத்தில் மணமுடித்து

கவப்பது பற்றி— இப்படிப் பலப்பல கவலைகளும் கடமைகளும் !

மரணம் அன்றாட நிகழ்ச்சிகளில் ஒன்றாகவே ஆகி விட்டது. இப்படி சாதாரணமாகிவிட்ட மரணத்திற்கு நாம் ஏன் அஞ்ச வேண்டும்? வரும் போது வரட்டும் என்று விட்டுவிட வேண்டும்.

எனவேதான் நமது வாழ்க்கையில் நாம் என்ன என்ன செய்ய வேண்டும் என்று எண்ணியுள்ளோமோ அவைகளைப்பற்றியே சிந்தித்து செயலாற்ற வேண்டும். துணிவுடன் வாழ வேண்டும். துணிவு துணைகளிலேயே சிறந்தது. சிந்தனை அதற்கு உறுதுணை.

திட்டமிட்ட வாழ்க்கை சிறப்பானது. இலட்சியம் உள்ள வாழ்க்கையாக அமைத்துக் கொள்ள வேண்டும். ஒரு குறிக்கோளை உள்ளத்தில் அழுத்தமாக பதிய வைத்துக் கொள்ள வேண்டும். அதற்கான திட்டத்தை செயலாக்க முனைய வேண்டும். இடையில் ஏற்படும் தோல்விகள் நம்மை அஞ்ச வைக்கும். அது போன்ற நேரத்தில் துணிவுடன் அஞ்சாது மீண்டும் மீண்டும் முயன்று வெற்றியை நோக்கிச் செல்ல வேண்டும்.

எப்படியாவது வாழ்வோம் என்கின்ற போக்கு இருத்தல் கூடாது. இப்படித்தான் வாழ வேண்டும் என்று நமது நிலைக்கு, தகுதிக்கு ஏற்ற சிறப்பான வாழ்க்கையை நிர்ணயித்துக் கொள்ள வேண்டும். நாம் காணுகின்ற வாழ்க்கைகளெல்லாம் கனவில் வரக்கூடும். கனவில் வந்ததெல்லாம் உண்மை வாழ்க்கைக்கு உதவாது, அதனை நிறைவேற்றுவதும் இயலாது.

சிலர் தேவையற்ற ஆடம்பர வாழ்க்கையை அடைந்தே தீர வேண்டும் என்று தீவிரமாக இருப்பர். அந்த ஆசை அவர்கள் உள்ளத்திலே வேறூன்றி விடுவதால் அடுத்தவர் கண்டு வியக்கும் வகையில் தான் வாழ்ந்து காட்ட

வேண்டும் என்கின்ற ஆர்வம் வந்து விடுகிறது. தகுதிக்கு மீறிய தேவைகளைத் தேடுவதில் குறிக்கோளாக இருப்பர். அப்படிப்பட்ட எண்ணங்கள் வாழ்வின் கீழ்நிலைக்கே கொண்டு சென்று நிறுத்தும். அதுவே மரணத்தின் பிடிக்குக் கூட தயாராகி விடும். கடன் தொல்லை களால் எத்தனையோ குடும்பங்கள் மாய்ந்து விட்டதாக செய்திகளில் நாம் அன்றாடம் பார்க்கின்றோம்.

அம்மா— அப்பா— பாட்டன் —பாட்டி, மகன்—மகள், பேரன்—பேத்தி, அண்ணன்— தம்பி, அக்கா— தங்கை, மாமன்— மாமி, சிற்றப்பா— பெரியப்பா இப்படிப்பல உறவுகள் நமக்கு உண்டு.

இவைகள் எல்லாம் குடும்ப வாழ்க்கைக்குப் பயன் படுமேயன்றி அதுவும் கூட்டுக் குடும்பங்களுக்கு மிகவும் பயன்படுமே தவிர, அவரவர் தனிப்பட்ட குடும்பத்துக்கு அதுவும் இந்தக் காலத்தில் பயன்படுவதில்லை. என் குடும்பம், என் கணவன், என் மனைவி, என் பிள்ளைகள் என்று இப்போதெல்லாம் தனித்தனி சிந்தனையாகி விட்டது.

எது எப்படி எண்ணிக் கொண்டு வாழ்ந்தாலும் உறவினால் இணைந்த உறவுக்கும் கூட, உயிர் தனித் தனி தான்! அப்படித்தான் மரணமும். இருக்கும் வரை ஏதோ இணைந்து வாழ்வதாக இருந்தாலும் போகும் போது முன்னுக்குப் பின் ஒவ்வொருவராக செல்ல வேண்டி யவர்களே. எனவேதான் அவரவர் தன் கடமைகளைப் பற்றியும், தான் சாதிக்க வேண்டியவற்றையும்— எப்போதும் தன்னுடைய சிந்தனையில் வைத்து செயலாற்றுதல் வேண்டும். தந்தை இருக்கிறார் நமக்குக் கவலையில்லை என்பதோ, அது போலவே அண்ணன் இருக்கிறார், மாமா இருக்கிறார் என்பதெல்லாம் 'இருக்கிறார்' என்பதற்குப் பயன்படுமே ஒழிய எதையும் யாரையும் எதிர்பார்த்து நடப்பதில்லை. இறுதி மூச்சு

நிற்கும் வரை தன் உழைப்பு தன் சிந்தனையால் ஏற்படும் தெளிவு, நாம் சேமிக்கும் நல்லது கெட்டது இவைகளே துணை.

பல குடும்பங்களைப் பார்க்கின்றோம். தாய் தந்தை தனது பிள்ளைகளை நன்றாகக் கல்வி பயில வைத்து, நல்ல பணியிலும் அமர்த்தி, கை நிறைய சம்பாதிக்கும் நிலைக்கும் ஆளாக்கியிருப்பர். அது மட்டுமல்ல, நல்ல பொருத்தமான வாழ்க்கைத் துணையையும் அமைத்து வைப்பர். என்றாலும் குடும்பத்தலைவரான தந்தைக்கு மட்டும் இறுதிவரை உழைப்பு நீங்காது.

"ஒரு பிள்ளை வெளியூரில் இருக்கின்றான். இன்னொருவன் உள்ளூர் தான் என்றாலும் தனிக்குடித்தனம் நானும் என் மனைவியும் வாழ, நான் உழைத்துத்தானே ஆகவேண்டும்?" என்பார். இது எதைக் காட்டுகிறது. ஒருவர் வாழ்க்கை ஒருவருக்கு நிரந்தரமாகப் பயன்படுவதில்லை. அவரவர் குடும்பம் அவரவர்களின் சுயநலத்தால் பிணைக்கப்பட்டுள்ளது. ஆனால் உயிர் மட்டும் எப்போதும் தனித் தனியே. எனவே அது எப்போது போகப் போகிறது என்பது யாருக்கும் தெரியாது.

நாம் சாகின்ற வரையில் நமது கடமைகளை செய்தே ஆகவேண்டும். இவர் இருக்கிறார்—அவர் இருக்கிறார் என்று நம்பி வாழ்வது முட்டாள்தனம். அதைவிட முட்டாள்தனம் நாம் ஒரு நாளைக்குச் சாகத்தானே வேண்டும். எதற்காக உழைக்க வேண்டும்? எதற்காக பிறருக்குப் பயன்பட வேண்டும்? என்று எண்ணுவது.

நாம் இருப்போம் அல்லது இல்லாது போவோம் அதைப்பற்றியெல்லாம் கவலைப்படுதல் கூடாது. இருக்கும் வரை இறுதி மூச்சு உள்ளவரை நாம் உழைத்தாக வேண்டும். பல கடமைகளை மறக்காமல் செய்தாக வேண்டும். பிறருக்குப் பயன்பட்டாக வேண்டும். மனிதப் பிறவியின் மாண்பினை முழுக்க முழுக்க உணர்ந்

தாக வேண்டும். 'மரணம்' இதனை அஞ்சாமல் மறக்க வேண்டும்.

'அரிது அரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது' மரணம் இயற்கையாக வரவேண்டும். நாமாக அதனைத் தேடிச் செல்லக்கூடாது. கடன் தொல்லையானாலும், கல்வி தோல்வியானாலும், காதல் தோல்வியானாலும், குடும்பத் தொல்லையானாலும் பொறுமையுடன்—திறமையுடன் பிரச்சனையைத் தீர்த்து வாழவே முயல வேண்டும். வெற்றி நிச்சயம்.

# 14. உண்மை

உண்மை எப்போதும் கசக்கும். உண்மையைச் சொல்லும்போது சிலருக்கு எரிச்சல்வரும். பொய்மை பகட்டாக இருக்கும். விரைவில் அனைவருக்கும் புரியும். கேட்பதற்கு இனிப்பாக இருக்கும்.

உண்மையாக வாழும்போது நமக்கு வருவது துயர மாகவே இருக்கும். பொய்களோடு வாழுகின்றவனும் உண்மையோடு வாழ்பவனும் மனிதன்தான்.

தங்கத்தில் கலப்படம் இருந்தால் அசுத்தமான தங்கம் என்கிறோம் 'அசுத்தம்' அதனால் அதை ஏன் தங்கம் என்று சொல்ல வேண்டும் என்று கேட்க முடியுமா ? அசுத்தமானாலும் அது தங்கம் என்றுதான் சொல்ல முடியும். அசுத்தம் எரிந்து போக முடியும். தங்கம் மீண்டும் சுத்தமாக முடியும். அதனால் அதைத் தங்கம் என்றுதான் கூறவேண்டும்.

துயரம் எரிந்து போக முடியும். யோகம் நிலைக்க முடியும். அதனாலேயே ஆனந்தப் பயணம் தொடர முடியும். உலகில் யாரும் மீள முடியாத துயரில் மூழ்கு வதில்லை. மீண்டும் தொடரும் நிலைக்கு அனைவரும் வருகிறோம். இது உண்மை.

"நான் எதுவாக ஆக முடியுமோ. அதுவாக ஆக முடியவில்லை; என்னால் எதை அடைய முடியுமோ அது கிடைக்கவில்லை. எது சாத்தியமோ அது அசாத்திய மாகி விட்டது" என்று நம் உள்ளத்தின் உணர்வுகள் அறிந்து செய்யும் நினைவோட்டத்தால்தான் துயரம் ஏற்படுகிறது.

எத்தனை அதிகமாக திறமைசாலியாக மனிதன் இருக்கிறானோ அத்தனை ஆழமாக துயரம் அவனைப் பாதிக்கிறது. உண்மையை உணர்ந்தவன் ஆழ்ந்த துக்கத் திற்கு ஆளாக முடியாது.

பல ஆன்றோர்கள்- சான்றோர்கள்- மகான்கள் தன் சொந்த ஊரில் மதிப்பும் மரியாதையும் இன்றியே இருந் திருக்கிறார்கள். முழுமையான ஞானம் பெற்றபின் உலகெல்லாம் மதிக்கும் நிலை வந்தபோது கூட தன் சொந்த ஊரில் நம்ப மறுத்தார்கள். உண்மையென்பது நிதானமாகவே புலப்படும்.

ஏசுநாதரையே அந்த ஊர் மக்கள் "தச்சன் ஜோசப்பின் மகன்தானே! எங்கிருந்து ஞானம் அடைய முடியும்? நேற்றுவரை மரம் அறுத்துக் கொண்டிருந் தான்! ஞானி ஆகி விடுவானா? என்ன!" என்று ஏளனம் செய்தார்கள். அந்த ஏளனத்தில் தச்சனின் மகனை உயர்ந்த ஞான நிலையில் ஏற்றுக் கொள்வதில் அவர்களுக் குள்ளே பொறாமை இருந்தது.

விவேகானந்தருக்கு அமெரிக்காவில் கிடைத்த மரியாதையும் மதிப்பும் கல்கத்தாவில் ஒருபோதும் கிடைத்ததில்லை. உலகம் அறிந்தபின் தானாக நம் ஊர் பையன் என்று பெருமை பேசிக் கொண்டனர். உண்மை மெல்ல மெல்ல வெளிச்சத்துக்கு வரும்.

எனவேதான் யாரையும் குறைத்து மதிப்பிடுதல் கூடாது. அது மட்டுமல்ல, உண்மை எப்போதும் பேசுவ

தில்லை. பெரும்பாலும் மௌனமாகவே இருக்கும். மௌனத்தால் பல உண்மைகளை நாமும் புரிந்து கொள்ளலாம், மற்றவர்களும் புரிந்து கொள்வார்கள். ஒரு நேரத்தில் பல விஷயங்களை மௌனத்தால் புரிந்து கொள்ள முடியும். ஆனால் பேசிக் கொண்டிருக்கும் போது பேசுவது மட்டுமே புரிகிறது.

ஒரு ஐந்து நிமிட தூக்கத்தில் வரும் கனவில் அமெரிக்காவுக்குக் கூட சென்று வரலாம். பலரைச் சந்திக்க முடிகிறது. கனவிற்கு அவ்வளவு ஆற்றல். செயலுக்கு அத்தனை ஆற்றல் இருப்பதில்லை. மௌனத்தில் சிந்திக்கும்போது அப்படிப்பட்ட ஆற்றல் வருவது உண்மை பல உண்மைகள் மௌனமாகவே இருக்கிறது. பலர் மௌனங்களில் உண்மைகள் ஒளிந்து கொண்டு இருக்கிறது.

ஒரு சமயம் புத்தர், தமது சீடர்கள் கூடியிருந்த இடத்திற்குக் கையில் ஒரு தாமரை மலரை ஏந்தியவாறு வந்தார். அங்கே அமர்ந்து, அந்த மலரைப் பார்த்தவாறு இருந்தார். கூடியிருந்தவர்கள் வெகுநேரம் பொறுமையுடன் இருந்தனர். பிறகு அலுத்துப்போய் விட்டனர். அமைதி யிழந்தனர். பொதுவாக ஒரு பரபரப்புடன் தெளிந்து கொண்டிருந்தனர். அனைவரும் புத்தர் ஏன் இப்படி மௌனியாக இருக்கிறார்? பேசமாட்டாரா! மேலும் அரைமணி நேரம் ஆயிற்று. அமைதியின்மை அதிகமாயிற்று. ஒருவர் பொறுமை இழந்து எழுந்து நின்று 'நீங்கள் பேசுவதைக் கேட்பதற்காகவே நாங்கள் வந்திருக்கிறோம். ஏன் மௌனமாக இருக்கிறீர்கள்?' என்று கேட்டார். புத்தர் புன்னகையுடன் "நான் பேசிக் கொண்டுதான் இருக்கிறேன். கேளுங்கள்! கேளுங்கள்!" என்றார். ஆனால் சீடர்கள் விழித்தனர். "நீங்கள் எதுவும் பேசவில்லையே! நாங்கள் எதைக் கேட்பது!" என்றனர். அவர்களில் பிட்சு மகா காச்யபர் என்பவர்

சிரிக்கலானார். புத்தர் அவரை அருகில் அழைத்து, அந்த மலரை அளித்தார். மற்ற சீடர்களை நோக்கிக் கூறினார்: "சொற்களால் கூற முடிந்தவை அனைத்தையும் உங்களுக்குக் கூறிவிட்டேன்; சொற்களால் கூற முடியாததை, உள்ளத்துள் மட்டுமே கூற முடிந்தவற்றை, நான் மகா காச்யபருக்குக் கூறிவிட்டேன். இனி நீங்கள் கேட்க வேண்டியதை அவரிடம் கேளுங்கள்" என்று புத்தர் சொன்னாராம்.

அதற்குப் பின் பலர் பலமுறை மகா காச்யபரிடம் அதைப் பற்றி கேட்ட வண்ணம் இருந்தனர். ஆனால் பிரதம சீடர் கூட ஒன்றும் சொன்னபாடில்லை. கடைசியாக ஒருமுறை, "புத்தரே சொல்ல முடியாததை நான் எப்படி சொல்ல முடியும் என்று சொல்லி விட்டார். உண்மை அதன் உணர்வு அறிந்து கொண்டு புரிந்து கொள்ள வேண்டுமே ஒழிய எடுத்துச் சொல்லி விளக்குவதில்லை

மனிதனுக்கு எது இயற்கை என்பது, மனிதனுடைய உணர்வின் தளம் எது என்பதைப் பொறுத்திருக்கிறது. ஒவ்வொரு தளத்திலும் இயற்கை சுபாவம் மாறுபட்டுக் கொண்டே இருக்கும். ஒரு குழந்தைக்கு சுபாவமாக இருப்பது வாலிபனுக்கு சுபாவமாக இருப்பதில்லை. வாலிபனுக்கு சுபாவமாக இருப்பது முதியவனுக்கு சுபாவமாக இருப்பதில்லை. நோயாளிக்கு சுபாவமாக இருப்பது ஆரோக்கியமுள்ளவனுக்கு சுபாவமாக இருக்காது. அதனால் உண்மையில் சுபாவம் ஒரு நிச்சயித்த விஷயம் அல்ல.

கல்லுக்கு உண்மையான குணம் ஒன்று. நீருக்கு உண்மையான குணம் ஒன்று. தீயின் குணம் உண்மையில் ஒன்று. நிரந்தரமான உண்மை குணங்களைப் புரிந்து

கொண்ட மனிதனுக்கு மட்டும் நிரந்தரமான குணம் இருப்பதில்லை!

ஒரு கரித்துண்டையும் ஒரு வைரத்தையும் அருகருகே வைத்துப் பார்த்தால் வைரமும் கரியேதான் என்ற எண்ணம் ஒருபோதும் ஏற்படாது. வைரத்துக்கும் கரிக்கும் அடிப்படைத் தத்துவத்தில் எவ்வித வேறுபாடும் இல்லை. உண்மையில் கரியே இலட்சக்கணக்கான வருடங்கள் பூமியின் அடியில் அழுத்தத்தில் இருந்து வைரம் ஆகிறது. அதனால் கரியில் இருந்துதான் வைரம் உண்டாகிறது, அது கரியின் கடைசிப் பயணம். மனிதன் கூட கரியின் நிலையில் இருந்துதான் தன் பயணத்தைத் துவங்கினான். இன்று இயந்திரத்தில் ஏறி வானமண்டலம் எல்லாம் சென்று ஆராயும் வைர நிலைக்கு வளர்ச்சி பெற்றான். இது விஞ்ஞான மறுமலர்ச்சி.

அது போலவே உண்மை மன வளர்ச்சியிலும் வைர நிலைக்கு வரவேண்டாமா ?

# 15. முடிவுரை

"உண்மையே இறைவன்" எனும் இந்நூல் அனைவர்க்கும் பயன்பட வேண்டும் என்பதற்காகத் தேடித் தேடி எழுதினேன். இறைவனைப் பற்றி அதிகம் தெரிந்து கொள்வதை விட மனிதன்— உண்மை— மனவளர்ச்சி— சமுதாயம்— மதம்— பல ஆன்றோர்கள் அறிவுரை இவைகளைப் படித்து புரிந்து கொண்டு வாழவேண்டும் என்பதே குறிக்கோள்.

அச்சம் தவிர்த்து துணிந்து செயல்பட்டு மரணபயம் இன்றி சமுதாயத்தின் பிடிக்கு ஆளாகாமல் சிறப்பான வாழ்க்கையை அனைவரும் பெற்றிட வேண்டும் என்பதே எண்ணம்.

இயற்கை வளங்களைப் பற்றியெல்லாம் நாம் புரிந்து கொள்கிறோம். விஞ்ஞான வளர்ச்சிதனை வெகுவாக ஆராய்ந்து அறிந்து கொள்கிறோம். மன வளர்ச்சியில் மட்டும் நாட்டம் இருப்பதில்லை. அதற்குக் காரணம் சுயநலம், பொய்மை, பொறாமை இவைகளில் நாட்டம். இது போன்ற விளக்கங்கள் கொண்ட நூல்களைப் படித்தால் சிறிதளவேனும் மனம் மாற வழிசெய்யும் என்கின்ற நம்பிக்கை.

வீணான கற்பனை உருவங்களை காலமெல்லாம் கடன் பட்டேனும் சென்று, கண்டு, தொழுதால்தான் தன் வாழ்வு வளம் பெறும் என்பதைத் தவிர்த்து அந்த நேரத்தில் தனது ஆற்றலை கடமைகளில் காரியமாற்றும் நிலைக்கு மாற்றிக் கொள்வதால் எத்தனையோ நலன் களைப் பெற இயலும் என்பதை உணரவேண்டும் என்பது என் சின்ன ஆசை.

எனவே எனது "உண்மையே இறைவன்" எனும் இந்த சிறிய நூலினை அனைவரும் ஆதரித்து பயன்பெறுவீர்! என்று வணக்கமுடன் கூறி முடிக்கிறேன்.

—மாநிலன்

